முனைவர் ச. மெய்யப்பன்
அறக்கட்டளைச் சொற்பொழிவு

# திருமுறைப் பெருமை

19-12-1991

முனைவர் வை. இரத்தினசபாபதி
சென்னை





தொகுப்பியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

முனைவர் ச. மெய்யப்பன்
அறக்கட்டளைச் சொற்பொழிவு

# திருமுறைப் பெருமை

19-12-1991

முனைவர் வை. இரத்தினசபாபதி
சென்னை





மெய்யப்பன்
அறக்கட்டளை

தொகுப்பியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

ISBN: 81-7090-184-7

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 146_1

திருவள்ளுவர் ஆண்டு 2022 மார்கழி-திசம்பர் 1991

நூல் : திருமுறைப் பெருமை

ஆசிரியர் : வை. இரத்தினசபாபதி

பதிப்பு : முதற் பதிப்பு 1991

விலை : உரூ 15/_

அச்சு : தமிழ்ப் பல்கலைக்கழக அச்சகம்,
தஞ்சாவூர்.

# திருமுறைப் பெருமை

"ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய் உடன் தோன்றினராய்
மூன்றாய் உலகம் படைத்து உகந்தான் மனத்துள் இருக்க
ஏன்றான் இமையவர்க்கு அன்பன் திருப்பாதிரிப்புலியூர்த்
தோன்றாத்துணையாய் இருந்தனன் தன்னடியோங்களுக்கே"

– அப்பரடிகள்

## முன்னுரை

சிவன் என்னும் நாமம் தமக்கே உரிய செம்மேனி எம்மானாகிய பரம்பொருளின் புகழ்பரவும் அருளாளர்களுடைய அமுதத்தமிழ் வாக்குகளின் தொகுப்பே 'திருமுறை' எனப்பெறும்.

திருஞானசம்பந்தர் முதலாகச் சேக்கிழார் ஈறாக அமைந்த இருபத்தேழு அருளாளர்களின் அமுத வாக்குகளைத் திருவருட்டுணை கொண்டு பன்னிரு திருமுறைகளாகத் தொகுத்துள்ளமை சான்றோர்தம் எழுத்துக்களிற் காணப்பெறும் வரலாற்றுண்மையாகும்.

தொகையால் பன்னிரண்டெனவும் , இயற்றிய அருளாளர்களின் எண்ணிக்கையால் இருபத்தேழு எனவும் நூல்களின் எண்ணிக்கையால் நாற்பது எனவும் பாடல்களின் எண்ணிக்கையால் சற்றொப்பப் பதினெண்ணாயிரம் எனவும் பரந்துகிடந்த அருளனுபவப் பாக்களையெல்லாம் 'திருமுறை' என்ற பொதுச்சொல்லால் குறிக்கப்பெறும் வழக்கம் சைவப்பெருமக்களிடையே காணப்பெறும் மரபாகும்.

திருமுறைகள் அருள்னுபவ வாக்குகள் மட்டுமே எனக்கொள்வதோடு, அவை வாழ்வியல் நூலாகவும் அறந்தழைக்கும் அறநூலாகவும் மெய்ப்பொருள் நூலாகவும்

விளங்கும் தன்மையுடைத்தாதல் காரணத்தால் காலந்தோறும் அவைகளை ஆய்ந்து ஆய்ந்து தோய்ந்து தோய்ந்து அனுபவித்துணர்ந்த சான்றோர்கள் அவ்வச்சிறப்புக்களையெல்லாம் எடுத்துக்கூறி வந்துள்ளனர். அவைகளை ஏற்ற பெற்றி ஒருங்கு வைத்துக் காணுதல் இக்காலச் சமுதாயத்திற்கு மிகவும் பயனளிப்பதொன்றாம்.

## திருநெறியதமிழ்

ஞானவாரமுதமுண்ட பிள்ளையார் எனவும் தாவில் சராசரங்களெல்லாம் சிவம்பெருக்கும் பிள்ளையார் எனவும் சேக்கிழார் அடிகளால் போற்றப்பெற்ற திருஞான சம்பந்தரின் அருள்ா ாக்கை முதலாகக் கொண்டே இன்று திருமுறைகள் எண்ணப்பெறுகின்றன. திருஞான சம்பந்தப்பெருமான் திருமுறைகள் என்ற பெயராற் குறிக்காமல் **திருநெறிய தமிழ்** என்றே குறிப்பிட்டருளு கின்றார். திருஞானசம்பந்தர் ஞானப்பால் அருந்தியதும் அருளப்பெற்றதாகக் கொள்ளப்பெறும் "தோடுடைய செவியன்" எனத் தொடங்கும் பதிகம் சேக்கிழார் பெருமானால் "மெய்ம்மை மொழித் திருப்பதிகம்" என்று போற்றப்பெற்ற பெருமையை உடையது. இப்பதிகத்தின் இறுதியில் நின்ற திருக்கடைக்காப்புத் தமிழானது,

அருநெறிய மறை வல்ல முனியகன்
பொய்கை அலர் மேய
பெருநெறிய பிரமாபுர மேவிய
பெம்மான் இவன் தன்னை
ஒருநெறிய மனம் வைத்துணர் ஞான
சம்பந்தன் உரைசெய்த
**திருநெறிய தமிழ்** வல்லவர் தொல்வினை
தீர்தல் எளிதாமே.

என அமைகிறது.

'திருவருள் விலாசம்' என்ற தலைப்பில் இரண்டு அருட்பாக்களை வள்ளற்பெருமான் அருளியுள்ளார். இறைவன் தமக்கு மெய்ம்மொழிப் பொருள் விளக்கத்தை

அறிவுறுத்திய நிலையையும் அப்போது தம்நிலை எவ்வாறு இருந்தது என்பதையும் அப்பாக்களில் உணர்த்தும் வள்ளலார்,

"திருநெறி மெய்த் தமிழ் மறையாம் திருக்கடைக் காப்பதனால்
திருவுளங் காட்டியநாளில் தெரிந்திலன் இச்சிறியேன்
பெருநெறி என் உளத்திருந்து காட்டிய நாள் அறிந்தேன்
பிழைபடாத தெய்வமறை இதுஎனப் பின்பு உணர்ந்தேன்
ஒருநெறியில் எனது கரத்து உவந்தளித்த நாளில்
உணராத உளவையெலாம் ஒருங்குணர்ந்து தெளிந்தேன்
தெருள் நெறி தந்தருளும் மறைச்சிலம்பணிந்த பதத்தாள்
சிவகாமி வல்லி மகிழ் திருநடத் தெள்ளமுதே"

என்று குறிப்பிட்டருளுகின்றார். இறைவன் அருளியதையும் திருஞானசம்பந்தர் அருளியதையும் ஒன்றாக இணைத்தே எடுத்துக்காட்டும் அருமை இன்புறத்தக்கது. **திருநெறி மெய்த் தமிழ்மறையாம் திருக்கடைக்காப்பு** என்பது திருஞான சம்பந்தர் தம் திருப்பதிகங்களையே குறித்தது. **திருநெறிய தமிழ்** என்று திருஞானசம்பந்தர் அருளியதையும் 'மெய்ம்மை மொழித் திருப்பதிகம்' என்று சேக்கிழார் அருளியதையும் 'திருக்கடைக்காப்பு' என நின்ற நிலையையும் உளத்தே கருதிய வள்ளலார் இம்மூன்றையும் இணைத்து நிறுத்தும் நிலையில் **திருநெறி மெய்த் தமிழ்மறையாம் திருக்கடைக்காப்பு** என்று குறிப்பிட்டருளுகின்றார்.

திருஞானசம்பந்தர் பாடலிலும் வள்ளலார் பாடலிலும் காணப்பெறும் ஒற்றுமை ஒன்றையும் குறிப்பிட்டுக் காணுதல் வேண்டும். அருள்நெறி, பெருநெறி, ஒருநெறி, திருநெறி என்று திருஞானசம்பந்தர் வகுத்தெடுத்து முதற் பதிகத்திலேயே அருளப்பெற்ற முறைகளை அப்படியே திருநெறி, பெருநெறி, ஒருநெறி என்று வள்ளலாரும் எடுத்தாண்டிருப்பதை உளங்கொளல் வேண்டும்.

## வழிமொழி

திருவருளால் தாம் பெற்ற சிவானுபவத்தை வெளிப்படுத்துகின்ற நிலையில் அருளாளர்கள்தம்செயலற்று,

அந்தத் தாம் அற்று, நாதன் தன் செயலிலே ஒன்றியிருந்து, தம் கருவி கரணங்களைத் திருவருளோடு இணையநிறுத்தி, திருவருளோடு ஒன்றியநிலையில் சிவயோக பரராய் நின்று வெளிப்படுத்திய காரணத்தால் திருஞானசம்பந்தர் தம் மொழியாகிய பதிகங்களை **வழிமொழி** என்ற சொல்லாற் குறிப்பிட்டருளுகின்றார்.

திருஞானசம்பந்தப் பெருமான் தாம் அருளிய திருப்பதிகங்களுள் ஒன்று **வழிமொழித் திருப்பதிகம்**. வழிமொழித் திருப்பதிகத்தின் இறுதியில் உள்ள திருக்கடைக்காப்புச் செய்யுளைச் சேக்கிழார் 'தக்க திருக்கடைக்காப்பு' என்று பாராட்டுகின்றார். அது,

"ஒழுகல் அரிது அழிகலியில் உழிஉலகு
பழிபெருகு வழியை நினையா
முழுதுடலில் எழுமயிர்கள் தழுவுமுனி
குழுவினொடு கெழுவு சிவனைத்
தொழுது உலகில் இழுகுமலம் அழியும் வகை
கழுவும் உரை கழுமல நகர்ப்
பழுதில் இறை எழுதும் மொழி தமிழ்விரகன்
வழிமொழிகள் மொழிதகையவே"

என அமைகிறது.

சிவனைத்தொழுது உலகில் இழுகுமலம் அழியும் வகையில் அருளவேண்டும் என்று கேட்டுக்கொண்டதால் அருளப் பெறும் உரையாகவும் கழுமல வளநகரில் உள்ள இறைவனால் எழுதும் மொழியாகவும் நின்ற மொழிகளே திருஞானசம்பந்தர் மூலமாக உலகுக்கு அருளப்பெறும் காரணத்தால் 'தமிழ்விரகன் வழிமொழிகள்' என்று குறிப்பிடப்பெற்றன. இதனாலேயே திருஞானசம்பந்தரின் அருள் வாக்குகளையும் பிறவற்றையும் இறைவனே நேர்நின்று அருளியவைகளாக இராமலிங்க அடிகள் எடுத்துக்காட்டினார்.

இவ்வாறு 'திருநெறிய தமிழ்' என்றும் 'வழிமொழித் தமிழ்' என்றும் சுட்டிக்காட்டப்பெற்ற சொற்களில் அமைந்த 'திருநெறி' என்பதைத் திருஞானசம்பந்தருக்குக் காலத்தால்

முற்பட்ட திருமூலர் எடுத்தாண்டதாகக் குறிப்பிடும் மரபு ஒன்று உண்டு.

"திருநெறியாவது சித்து அசித்தன்றிப்
பெருநெறியாய பிரானை நினைந்து
குருநெறியாற் சிவமாநெறி கூடும்
ஒருநெறி ஒன்றாக வேதாந்தம் ஓதுமே"

-திருமந்திரம் 65

என்றும்

"திருநெறியாகிய சித்து அசித்தின்றிக்
குருநெறியாலே குருபதம் சேர்ந்து
கருமநியமாதி கைவிட்டுக் காணும்
துரிய சமாதியாம் தூய்மறையோர்க்கே"

-திருமந்திரம் 82

என்றும் வருகின்ற இரண்டு திருமந்திரப் பாடல்களிலும் சித்துப் பொருளாகிய ஆன்மாவானது பெருநெறியாகிய பெருமானை நினைந்து குருவினால் சிவனைக் கூடும் நெறி என்பதே கொள்ளக் கிடக்கின்றது.

மேலே குறிப்பிட்டவைகளையெல்லாம் இணைத்துக் காணும் வகையில் திருநெறி என்பது சிவனைக் கூடும் நெறி எனவும் அதுவே வீட்டுநெறி எனவும் பொருள் கொண்டு அந்நெறியை அடைவதற்குக் குருவானவர் துணைநிற்பதால் அந்நெறிக்குக் குருநெறி என்றும் பொருள் கொள்ளும் மரபைச் சான்றோர்கள் மேற்கொண்டுள்ளனர்.

எனினும் இவைகளை விரிவாகச் சிந்தைசெய்து தனித்தன்மை காணும் வகையில் அமைத்துத் தெரிந்துகொள்ள வேண்டியதும் இற்றைநாளில் வேண்டப் படுவதொன்று.

மேற்கூறப் பெற்றவைகளால் இரண்டு உண்மைகள் புலப்படுகின்றன.

திருவை நேர்நிறுத்தி அருளனுபவமாகத் துய்த்துநின்ற நிலையில் வெளிப்பட்ட அனுபவ மொழி என்ற வகையில் "திருநெறித் தமிழ்" என்றும் அவ்வனுபவத்துடன் இறைவனிடம் உலகத்துயிர்கள் பற்றி, அவைகள் தம்முடைய அழுக்கு அழிவதற்கும் அவைகள் வீடுபேற்றை அடைவதற்கும் உரிய நெறிகளை அருளவேண்டும் என்று முறையிட்டுப் பெற்றதால் திருமுறை என்றும் அருளாளர்களால் கொள்ளப்பெற்றன என்றும் கொள்ளலாம்.

## திரு என்பதன் பொருள்

'திரு' என்பதற்கு உரை எழுத முற்பட்டவர்களெல்லாம் திருக்கோவையாருக்கு உரைவகுத்த பேராசிரியர் உரையைத் தழுவியே எழுதுவாராயினர். "கண்டாரால் விரும்பப்படும் தன்மை" என்பதே அப்பொருள்.

'திரு' என்பதற்கு நேர்ப்பொருளாக 'அழகு' என்பதையே கொண்டார்கள் பலரும்.

"நினக்கு அன்பருள்ளாம்- சிவமே பெறும் திரு எய்திற்றிலேன்" என்ற மணிவாசகப்பெருமான் திருவாக்கினுள், (திருச்சதகம்-5) காணப்பெறும் 'திரு' என்பதற்கு நல்லூழ் என்று உரை கூறினார் மகாவித்துவான் அருணைவடிவேலு முதலியார் அவர்கள்.

## அற்புதத்திரு

'அற்புதத்திரு' என்ற பொருள்பற்றி ஓர் அந்தாதி பாடியவர் காரைக்கால் அம்மையார். காரைக்கால் அம்மையாரின் நூல்கள் இரண்டு: பதிகங்கள் இரண்டு. அவை பதினொன்றாம் திருமுறையிற் சேர்க்கப்பெற்றுள்ளன.

அறுபான் மும்மை நாயன்மார்களில் தனிச்சிறப்பைப் பெற்றவர் காரைக்கால் அம்மையார். அவர் ஒருவரே அமர்ந்த கோலத்தில் வழிபடப் பெறுபவர்; இறைவனால் மூன்றுமுறை "அம்மையே" என்று அழைக்கப் பெற்ற பெருமையுடையவர்; இறைவன் திருநடம் ஆடுங்காலத்தில் அவர்தம் திருவடியின்

கீழ் என்றென்றும் அமர்ந்திருப்பவர். ".கீதம் முன் பாடும் அம்மை" என்பதும் காரைக்கால் அம்மையார்க்கு அமைந்த தனிச்சிறப்பாகும்.

மேலே கூறப்பெற்ற கருத்துக்களை இணைத்து நிறுத்தும் சேக்கிழார் பாடல்களைக் கீழே காணலாம்.

"மடுத்த புனல் வேணியினார் அம்மை என மதுர மொழி
கொடுத்தருளப் பெற்றாரைக் குலவிய தாண்டவத்தில்
அவர்
எடுத்தருளுஞ் சேவடிக்கீழ் என்றும் இருக்கின்றாரை
அடுத்தபெருஞ் சீர்பரவல் ஆரளவாயின தம்மா?"

"ஆதியோ டந்தமில்லான் அருள்நடம் ஆடும்போது
கீதமுன் பாடும் அம்மை கிளரொளி மலர்த்தாள் போற்றி"

-பெரியபுராணம். காரைக்காலம்மையார் புராணம் 65, 66.

"கீதமுன்பாடும் அம்மை" என்ற வரிக்கு, திருமுறையை முதன்முதல் தொடங்கிப் பாடியவர் காரைக்கால் அம்மையாரே எனப் பொருள் கொண்டு, தேவாரங்களைப் பதிப்புச்செய்த முன்னோர்கள் காரைக்காலம்மையார் பாடிய திருவாலங்காட்டுப் பதிகங்களையே முதன்முதலாக வைத்துப் பதிப்பித்த மரபு உண்டு.

காரைக்காலம்மையார் பாடிய பதிகங்களைப் பாடிய பின்பே ஏனைய பதிகங்களைப் பாட வேண்டும் என்ற மரபும் இருந்தது. [காஞ்சி நாகலிங்க முனிவர் பதிப்பித்த தேவார அடங்கன்முறையைக் கண்டு தெளிக]

மேலும், கோயில் என்று புகழப்பெறும் தில்லைத் திருப்பொன்னம்பலம் சிறப்புப் பெறுவதற்கு முன் வாழ்ந்தவர் பேயார் எனப்பெறும் காரைக்காலம்மையாராதலின் அவர் மாநடம் கண்டு களித்தலும் பாடுதலும் திருவாலங்காடாக அமைந்தது.

'இயல், இசை, கூத்து என்ற முத்தமிழிலும் சிறப்புற விளங்கிய அம்மையார்,

"பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல்
சிறந்து நின் சேவடியே சேர்ந்தேன்"

- அற்புதத்திருவந்தாதி 1

என்று எடுத்த எடுப்பிலேயே கூறியருளினார்கள்.

திருப்பதிகம் என்ற அமைப்பில் பதினொரு பாடல்களை அமைத்து, அவற்றுள் இறுதிப் பாடலைத் திருக்கடைக்காப்பு என்ற அமைப்புடையதாகச் செய்து, அதனுள் இயற்றியவர் பெயர், இயற்றுங்காலத்துத் திருவருள் உள்நின்று இயக்கிய முறை, படிப்பவர் பெறும் பயன் என்பவைகளை இணைத்துக் காட்டி, திருப்பதிக அமைப்பினை அருளியவர், காலத்தால் முற்பட்ட காரைக்கால் அம்மையாரே ஆவர்.

காரைக்கால் அம்மையார் அருளிய திருவாலங்காட்டுப் பதிகம், திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம் போலவே மாணிக்கவாசகர் அருளிய கோயில் திருப்பதிகம், கோயில் மூத்த திருப்பதிகம் என்ற இரண்டும் அமைந்துள்ளன.

காரைக்கால் அம்மையார் அருளிய திருவாலங்காட்டுப் பதிகம் இரண்டனுள் "கொங்கைதிரங்கி" எனத் தொடங்கும் முதற்பதிகம் நட்டபாடைப் பண்ணில் அமைந்தது. திருஞானசம்பந்தர் ஞானவாரமுதம் உண்டு சிவஞான சம்பந்தராகி, முதன்முதலாகப் பாடிய "தோடுடைய செவியன்" எனத் தொடங்கும் திருப்பதிகமும் நட்டபாடைப் பண்ணிலேயே அமைந்தது.

அம்மையார் அருளிய 'எட்டியிலவம்' எனத் தொடங்கும் திருவாலங்காட்டு மூத்த (இரண்டாவது) திருப்பதிகம் இந்தளப் பண்ணில் அமைந்தது. திருஞானசம்பந்தரின் இரண்டாவது திருமுறையின் முதற்பதிகமும் இந்தளப் பண்ணிலேயே அமைந்தது.

அடுத்து, திருஞானசம்பந்தரின் அற்புதநிகழ்ச்சியாகிய திருமயிலைப் பூம்பாவை நிகழ்ச்சியில் ஓர் உண்மை அமைகிறது. பூம்பாவைப் பதிகத்தின் கருப்பொருளாக அமைந்த செய்தியை எடுத்துக்காட்டும் வகையில் சேக்கிழார் பெருமான் அருளிய திருப்பாடல் ஒன்று உண்டு.

"மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன் மதி சூடும்
அண்ணலார் அடியார் தமை அமுதுசெய்வித்தல்
கண்ணினால் அவர்தம் நல்விழாப் பொலிவுகண்டு ஆர்தல்
உண்மையாம் எனில் உலகர்முன் வருக என உரைப்பார்"

-பெரியபுராணம் - திருஞானசம்பந்தர் 1087

மதிசூடும் அண்ணலார் அடியார்தமை அமுதுசெய்வித்தல் ஒன்றே போதுமானது என்றும் அதுவே சைவத்தின் தனிமுதற்கொள்கை என்றும் இஃது உலகில் வாழும் அனைத்து மக்களுக்கும் பொது என்றும் எடுத்துக்கூறி, அக்கொள்கையே உண்மைக் கொள்கை எனில் இவ்வெலும்பு பெண்ணாகட்டும் என்று கொள்கைச் சத்தியம் அமைக்கிறார் திருஞானசம்பந்தர். இத்தகைய கொள்கையை உலகுக்கு எடுத்துக்காட்டி வாழ்ந்து தெய்வமாம் பெரும்பேறு பெற்றவர் காரைக்கால் அம்மையாரே!

மாங்கனி விளைத்த அற்புதத்தால் மானுடம் இவர்தாம் அல்லர், நற்பெருந்தெய்வமாதல் அறிந்து அகன்ற வணிகன், தன்னை நோக்கிவந்த புனிதவதியார் திருவடிகளில் தன்மனைவி மகளுடன் வீழ்ந்து வணங்கி, தம்மைப் போற்றுதல் செய்மின் என வேண்டுகிறான். அப்போது புனிதவதியார் தமக்கு இனி அமைய இருக்கும் செயல் யாது எனத் தெளிய உணர வேண்டியநிலைமை வந்தபோது அவர்கள் திருவருளைச் சார்ந்து நின்று தெரியும் நெறியாய ஒரு நெறிய மனம், வைத்துணர்ந்து ஒருமுடிவினை வெளிப்படுத்தி அருளுகின்றார்கள். இந்நிலையைத் தெளிவுறத் தெரிந்து உளங்கொள வேண்டும் என்ற நோக்கத்தில் சேக்கிழார்,

"கொன்றைவார் சடையினர்தம்
குரைகழல் போற்றிச் சிந்தை
ஒன்றிய நோக்கில் மிக்க
உணர்வு கொண்டு உரைசெய்கின்றார்"

-பெரியபுராணம் - காரைக்கால் அம்மையார்புராணம் 48

என்று அருளிச் செய்கின்றார். இதே கொள்கையைத் திருஞானசம்பந்தர் தம்முடைய முதற்பதிகத்துத் திருக்கடைக்காப்பினுள்

ஒருநெறிய மனம் வைத்துணர் ஞானசம்பந்தன்

என்று குறிப்பிடுவதையும் இணைத்துக் காணுதல் வேண்டும்.

ஆயினும், காரைக்கால் அம்மையார் காலம் துணியப் பெறாமையால் இத்தகைய இணைப்பாய்வு நிகழ்த்தப் பெறவில்லை.

காரைக்கால் அம்மையார் காலத்தில் சிவபெருமான் திருவுரு எது என்று பலரும் வினவும் நிலை இருந்தது. சிவபெருமான் திருவுருவம் பற்றி இகழும் நிலை இருந்தது. வெற்று நூலறிவு பேசி நுழைவு இல்லாதவர்கள் இருந்தார்கள். திருவருளால் மெய்ப்பொருளை நோக்கும் விதியுடையவர்கள் இல்லை என்றெல்லாம் பேசும் காரைக்கால் அம்மையார், திருஞானசம்பந்தர் காலத்துக்கு முன்னே இருந்திருத்தல் வேண்டும்.

"அன்றும் திருவுருவம் காணாதே ஆட்பட்டேன்
இன்றும் திருவுருவம் காண்கிலேன்" - என்றுந்தான்
எவ்வுருவோ நும்பிரான் என்பார்கட்கு என்னுரைக்கேன்
எவ்வுருவோ நின்னுருவம் ஏது"

என்றும்

"கண்டு எந்தை என்று இறைஞ்சிக்
கைப்பணியான் செய்யேனேல்
அண்டம் பெறினும் அதுவேண்டேன்"

என்றும் (அற்புதத்திருவந்தாதி 61, 72) உருவம் காணுதல் வேண்டும் என விரும்புகிறார். இவைகளெல்லாம் திருஞானசம்பந்தர் காலத்துக்குப் பின்னிருந்தவராயின் அமைதல் கூடா என்று கொள்ளலாம்.

ஆயினும், திருநெறியதமிழைத் தோற்றுவித்தவர் திருஞான சம்பந்தரே என்னும் கொள்கையை அருளாளர்கள் அனைவரும் ஒருமுகமாக எடுத்துக் கூறியிருக்கிறார்கள்.

நம்பியாண்டார் நம்பிகள் திருஞானசம்பந்தப் பெருமானைப் "பதிகப் பெருவழிகண்ட பாலறாவாயர்" எனப் பாராட்டுகின்றார்.

"பதிகப் பெருவழி காட்டப்
பருப்பதக் கோன் பயந்த
மதியத் திருநுதல் பங்கன்
அருள்பெற வைத்த எங்கள்
நிதியை"

—ஆளுடையபிள்ளையார் திருஅந்தாதி 2.

"ஆறது ஏறுஞ் சடையான் அருள்மேவ அவனியர்க்கு
வீறது ஏறுந் தமிழால் வழிகண்டவன்"

—ஆளுடைய பிள்ளையார் திருச்சண்பை விருத்தம் 5.

என்று அருளும் நம்பியாண்டார் நம்பிகளின் திருவாக்கை ஓர்ந்து உன்னுக.

"உறவும் பொருளும் ஒண்போகமும் கல்வியும் கல்வியுற்ற துறவும் துறவுப் பயனும் வாழியர்கோன் திருநாமங்களே" என்று அருளாளர்களால் பாராட்டப்பெறும் திருஞானசம்பந்தப் பெருந்தகை பதிகப் பெருவழி கண்டதன்மூலம் அளவிடற்கரிய காலங் கடந்த பெருமையுடைய சைவ நன்னெறியை மறுமலர்ச்சி இயக்கமாக மாற்றி, அதற்கு இயக்க வடிவம் கொடுத்தும் செயற்படுத்தியும் தொண்டாற்றிய முதற்பெருந்தொண்டர் என்ற வரலாற்றுப் பெருமை படைத்தவராகிறார்.

இச்சிக்கலுக்குத் தீர்திறனாக ஒருகருத்தை வள்ளற் பெருமான் அமைத்துக் காட்டுவது நினைந்தின்புறத்தக்கது.

"திருவளர் திரு அம்பலத்திலே அந்நாள்
செப்பிய மெய்ம் மொழிப் பொருளும்
உருவளர் திருமந்திரத் திருமுறையால்
உணர்த்திய மெய்ம்மொழிப் பொருளும்
கருவளர் அடியேன் உளத்திலே நின்று

காட்டிய மெய்ம் மொழிப் பொருளும்
மருவினென் உளத்தே நம்பி நான் இருக்கும்
வண்ணமும் திருவுளம் அறியும்"

பிள்ளைப் பெருவிண்ணப்பம். 118.

என்பதனாலும்

திருஞானசம்பந்தரைக் குருவாகவே இறைவன் அறிமுகப் படுத்துகிறான் என்ற கருத்தில் 'அருளரசின் முதலரசு இயற்றிய துரையே' என்று அருளுவதாலும் குருமொழியே முன்மொழியாகக் கொள்ளவேண்டும் என்ற அடிப்படையில் திருஞானசம்பந்தர் முதற்குருபரன் ஆகிறார் என்பதை உளங்கொண்டே நம்பியாண்டார் நம்பிகள் முதலாக உள்ள அருளாசிரியர்கள் இவ்வாறு அமைத்துக் கூறியிருக்க வேண்டும் என்று தெளியலாம்.

காரைக்கால் அம்மையாரின் காலம் யாதாயினும் ஆகுக. அவர்தம் அருளனுபவத்தில் விளைந்த அற்புதத்திரு என்பதே நாம் காண வேண்டியதொன்று.

"யானே தவம் உடையன் என்நெஞ்சே நன்னெஞ்சம்
யானே பிறப்பு அறுப்பான் எண்ணினேன்"

—அற்புதத் திருவந்தாதி 7.

என்று தொடங்கிய அம்மையார், தாம் அருளாகவே ஆயின செய்தியைக் கீழ்வரும் அந்தாதிப் பாடலால் விளக்குகின்றார்.

"ஆயினேன்; ஆள்வானுக்கு அன்றே பெறற்கு அரியன்
ஆயினேன்; அஃதன்றே ஆமாறு-தூய
புனற்கங்கை ஏற்றான் ஓர் பொன்வரையே போல்வான்
அனற்கு அங்கை ஏற்றான் அருள்"

என்ற அற்புதத்திரு அந்தாதி 8-ஆம் பாடலில் அருளியிருப்பதைக் காணலாம்.

அம்மையார் இறையுருவை, மூவகை நிலைகளைக் கண்டு பேறுபெற்றதுடன் விளக்கிக் காட்டியும் அருளியுள்ளார்கள்.

திருக்கயிலையில் இறைவன் அம்மையாரை மூன்றுமுறை 'அம்மையே' என அழைத்தருளுகிறான். அம்மையாரோ இறைவனை 'அப்பா' என அழைத்தருளித் தம்முடைய அருள்நிலை அனுபவத்தை விளக்குகின்றார். 'அப்பா' என அழைத்த அருளனுபவமே மூவகைத் திருவுருவ நிலைகளை விளக்குவதாக அமைகிறது.

1. அம்மையை உடன்கொண்ட அப்பன் திருவுரு.

2. ஆண்மைப் பாதியாகப் பெண்மைப்பாதியாக
   நின்ற திருவுருவில் இரண்டையும் தன்னுள்
   அடக்கி மேலெழுந்திருவுருவமாகிய
   'அப்பர்' என்ற திருவுரு.

3. "பெண்ணுரு ஒருதிறன் ஆகின்று அவ்வுருத்
   தன்னுள் அடக்கிக் கரக்கினும் கரக்கும்"

என்று கூறும் வண்ணம் அம்மையைத் தன்னுள் அடக்கிக் கரந்த நிலையில் ஆடும் 'அப்பன்' திருவுரு. இவ்வுருவம் திருவாலங்காட்டு நடத்தில் மட்டுமே பேசப்படுகின்றது.

திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள் இரண்டனுள் முன்னர் நின்ற 'கொங்கை திரங்கி' எனத் தொடங்கும் பதிகம் முழுவதிலும் "அப்பன் இடம் திரு ஆலங்காடே" என்று முடிப்பமைந்து பாடலை முடித்தருளுகின்றார்கள். அப்பன் என முதற்பதிகம் முழுவதிலும் சுட்டிய அவனையே இரண்டாம் பதிகத்தில் குழகன், அழகன், இறைவன், பெருமான், பரமன், மாயன், விமலன் என்ற ஏழுபெயர்களாற் கூறி, எட்டாவது பெயராக 'அடிகள்' என்ற சொல்லை வைத்து முடித்துக் காட்டியிருக்கிறார்கள்.

திருவாலங்காட்டுத் திருப்பதிகத்தினுள் பேசப்பெறும் திருவுருவநிலை வேறு; அற்புதத் திருவந்தாதியில் பேசப்பெறும் திருவுருவநிலை வேறு.

அற்புதத் திருவந்தாதியில் பேசப்பெறும் அனுபவ நிலையே 'திரு' என்ற சொல்லின் பொருளை வரையறுப்பதாக அமைகிறது.

ஆண்மை, பெண்மை என்ற இருமை காணப்பெறுகிறது. இருமையைத் தன்னுள் அடக்கிய மூல முழுமுதன்மைப் பொருளாக அத்திரு விளங்குகின்றது. இத்தகைய கோலமே 'அற்புதத் திரு' என்பதாகச் சுட்டப்பெறுகிறது.

ஒருபக்கத்தில் திருமால்; மற்றைப் பக்கத்தில் உமையவள். இவ்விரண்டையும் இணைத்த நிலையில், இடையில் ஒரு மின்னுக்கீற்றுத் தோன்றுகின்றது. இஃது இரண்டையும் இணைத்ததாய் இரண்டையும் கடந்து மேலெழுவதாய் அமைகிறது.

மேலே குறிப்பிடப்பெற்ற இவ்வுருவத்தை அரியர்த்த பாகர் அல்லது சங்கரநாராயணர் என்றும் அர்த்தநாரீசுவரர் என்றும் கூறி விளக்கம் கூறியுள்ளார்கள். ஆயினும் அத்திருவுரு இரண்டிலும் சேராத ஒன்று.

உமையவள் இடப்பாகம் பெற்றவள். இடப்பாகத்தில் உள்ள உமைக்குப் பதிலாக அந்த இடத்தில் திருமால் அமையநின்ற திருவுருவம் சங்கரநாராயணர் திருவுருவம். இடப்பாகத்தில் உமை இருப்பாள் அல்லது நாராயணர் இருப்பார். வலப் பாகத்தில் இறைவன் உருவே காணப்பெறும். வலப்பாகத்தில் எத்தகைய மாற்றமும் இராது.

அம்மையார் குறிப்பிடும் திருக்கோலம் வேறு வகையானது.

"ஒருபால் உலகளந்த மாயவனாம் மற்றை
ஒருபால் உமையவளாம் என்றால்-இருபாலும்
நின்உருவமாக நிறம்தெரிய மாட்டேமால்
நின்னுருவோ மின்னுருவோ நேர்ந்து"

என்பது 41-ஆம் அற்புதத் திருவந்தாதி.

இடப்பால் உமையவள் இருக்க, வலப்பால் திருமால் அமைய நின்ற திருக்கோலம் இது. "அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே" என்ற அப்பரடிகள் திருவாக்கை எடுத்துக்காட்டி விளக்க முற்படும் சான்றோர்கள், ஓர் உண்மையைக் காணவேண்டும். அரியும் உமையும் ஒருவரே என்ற அனுபவநிலையை அப்பரடிகள் பேசுகிறார்.

அம்மையார் பேசுவது உமை வேறு, திருமால் வேறு. இருவரும் இருபக்கம் அமைய நின்ற திருவுருவமே அம்மையார் பேசுவது. இந்த இருமைக்கு இடையே தோன்றும் ஒளியுருவம் ஒன்று உண்டு. அஃது இருமையைத் தன்னில் கரக்கவில்லை. இருமையை வெளிப்படுத்தி இருமைக்கும் இடையில் இருக்கிறது. ஆனால் இருமை வேறு; மின்னுருவம் வேறு. இருமையைத் தொட்டுக் கொண்டிருந்தாலும் இருமையைக் கடந்த ஒருமை ஒளியாய் மேலோங்கி நின்ற திருவுருவே அம்மையார் அனுபவித்ததும் நமக்குக் காட்டியதுமாக அமைந்த திருவுருவம் என்று கொள்ளுதல் வேண்டும்.

அம்மையார் கண்ட இத்தகைய திருவுருவ அமைப்பைச் சோமாஸ்கந்த மூர்த்தம் போலக் கொள்ளலாம். அங்கே அம்மை அப்பனுமாய் இடையில் கந்து என நின்ற கந்தன் கோலம், சுட்டப்படுகிறது. இங்கே திருமாலும் உமையும் இருபக்கம் அமைய, இரண்டையும் இணைத்துக் 'கந்து' என நின்ற கோலமே

"அற்புதத் திரு"

என அமைகிறது. இது சைவம் ஏற்கும் இருபத்தைந்து மாகேசுர மூர்த்தங்கள் எதனோடும் இணைந்து வாராத 'அற்புதத் திருவுரு' எனக் கொள்ளுதல் வேண்டும்.

இத்தகைய திருவுருவத்தையும் அருளனுபவத்தையும் அம்மையார் பெற்ற முறையையும் எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

1. பேரன்பைப் பெருக்குதல்
2. திருவடிக்கு ஆளாதல்
3. ஆளானமையால் 'உரை' கேட்டல்
4. உரைமருவி உணர்தல்

என்ற வழிமுறைகளை அற்புதத் திருவந்தாதியில் அமைத்துக் காட்டினார். இத்தகு அற்புதத்திருவானது அம்மைக்கு "உரை" (மறைமொழி) அருளியிருக்கிறது. அவ்வுரையைப் பன்னாள் உணர்ந்து அருளனுபவம் பெற்றிருக்கிறார்கள். அவ்வனு

பவத்தின் வெளிப்பாடே 'அற்புதத் திருவந்தாதி' என்றும் அம்மையார் பேசுகின்றார்கள்.

"திரைமருவு செஞ்சடையான் சேவடிக்கே ஆளாய்
உரைமருவி யாமுணர்ந்தோம் கண்டீர் - தெரிமினோ
இம்மைக்கும் அம்மைக்கும் எல்லாம் அமைந்தோமே
எம்மைப் புறமுரைப்ப தென்"

என்ற 91-ஆம் அற்புதத் திருவந்தாதியில் உரைமருவி உணர்ந்ததை அருளிய அம்மையார்.

"உரையினால் இம்மாலை அந்தாதி வெண்பாக்
கரைவினால் காரைக்காற் பேய்சொல்-பரவுவார்
ஆராத காதலோடுஅண்ணலைச்சென்று ஏத்துவார்
பேராத காதல் பிறந்து"

என்ற 101-ஆம் அற்புதத்திருவந்தாதியில் உரைமருவி உணர்ந்ததைக் கரைவினால் (அன்பினால்), உயிர்கள் மேல்வைத்த அன்பினால் அருளினார்கள் என்றும் எடுத்துக் கூறி முடித்தருளினார்.

காரைக்கால் அம்மையார் கருத்துப்படி, இருமையின் இடையில், இருமையை இணைத்ததாய், இருமையைக் கடந்ததாய் விளங்கும் ஒளிநிலையே 'திரு' என்பதன் பொருளாக அமைந்தது என்று கொள்ளலாம்.

## திருஞானசம்பந்தரின் விளக்கம்

திருஞானசம்பந்தரே 'திருநெறிய தமிழ்' எனவும் 'வழிமொழித் தமிழ்' எனவும் அருளியிருக்கிறார். அவைகள் குருவாக்கு என்ற வகையில் முதன்முதலில் எடுத்துக் காட்டப்பெற்றன. அவற்றை அரன் செய்யும் வகையிலும் விளக்கிக் கூறும் வகையிலும் இரண்டு கருத்துக்களை இங்கே

நாம் காணுதல் வேண்டும்.

திருஞானசம்பந்தப் பெருமான் இந்நிலவுலகில் அரவு தீண்டி இறந்தவனை எழுப்புதல், எலும்பைப் பெண்ணாக்குதல் போன்ற பல அற்புதச் செயல்களை நிகழ்த்தியுள்ளார். அவை ஒருபக்கம் இருக்க, வேறோர் அற்புதத்தையும் அவர் நிகழ்த்தியுள்ளார். அஃது அவர் பிறந்த ஊரைப் பற்றியது.

சீகாழிக்குப் பிரமபுரம் முதலாகக் கழுமலம் ஈறாகப் பன்னிரண்டு பெயர்கள் உண்டு.

பன்னிரண்டு பெயர்களைத் தனித்தனியாக நிறுத்தியும் சக்கரமாகச் சுழல நிறுத்தியும் கோமூத்திரியாக நிறுத்தியும் ஏறக்குறைய 67 திருப்பதிகங்கள் அருளியுள்ளார். தாம் பிறந்த ஊரைப் பற்றி இவர் போல வேறு எந்த அருளாளரும் பாடிய வரலாறு அறியப் பெறவில்லை. பிறகு எல்லா ஊர்களையும் இணைத்து 'க்ஷேத்திரக்கோவை' என்ற பதிகத்தையும் அருளியுள்ளார்.

சீகாழிக்குரிய பன்னிரண்டு பெயர்களை வரிசை பிறழாது அமைத்து எழுதியும் சொல்லியும் வழிபட்டும் உய்ய வேண்டும் என்று வலியுறுத்திக் கூறும் கொள்கை யுடையவராக அமைந்தவர் திருஞானசம்பந்தர்.

பிரமபுரம் தொடங்கிக் கழுமலம் வரை வரிசை தவறாது சொல்லும் முறையை **'வழிமொழி'** என்றும் குறிப்பிடுகின்றார் காழிப்பிள்ளையார். சீகாழிக்குரிய பன்னிரு பெயர்களையும் இணைத்து நிறுத்திப் பாடும் வரிசையில் தலைநின்ற பதிகமாகக் கொள்ளும் சிறப்பினையுடையது ஏகபாதத் திருப்பதிகம்.

இடம் ஒன்று, பெயர் பன்னிரண்டாய் நின்றாற்போல, பதிகம் ஒன்று பாட்டும் பன்னிரண்டு. பன்னிரண்டு பெயர்களை ஒட்டிய பன்னிரண்டு தனிப்பாட்டுக்கள். ஓர் ஊர்ப் பெயருக்கு ஒரு திருப்பாட்டு என்ற முறையோடு வேறு ஒரு முறையும் உண்டு. நான்கு வரிகள் (பாதங்கள்) உள்ள பாட்டில் முதல் வரிதான் ஏனைய மூன்று வரிகளாக அமையும். இதனால் இது 'ஏகபாதம்' என்ற பெயரைப்

பெற்றது. எடுத்துக்காட்டாக,

"பிரமபுரத்துறை பெம்மான் எம்மான்
பிரமபுரத்துறை பெம்மான் எம்மான்
பிரமபுரத்துறை பெம்மான் எம்மான்
பிரமபுரத்துறை பெம்மான் எம்மான்"

என வரும் ஏகபாதத் திருப்பதிகத்தின் முதற்பாடலைக் காணலாம். நான்கு வரிகளும் ஒரே மாதிரி இருந்தாலும் வேறு வேறு பொருள்கள் உண்டு.

இச்செய்திகளையெல்லாம் இங்கே குறிப்பிடப்பெறுவதன் நோக்கம் என்ன என்ற வினா எழுதல் இயல்பு. திருஞானசம்பந்தப்பெருமான் பிறந்த ஊர் பிரமபுரம் முதலாய பன்னிரு பெயர்களைக் கொண்டதென்பது, பன்னிரு சைவக் கொள்கைகளை வளர்த்த பெருமையுடையது. இவைகளையெல்லாம் முறைப்படுத்திக்கூறும் முறையில் திருஞானசம்பந்தர் தம்முடைய முதன்மைப் பதிகத்தை எடுத்துக் கொள்கின்றார்.

எடுத்த திருப்பதிகம் என்றும் மெய்ம்மைமொழித் திருப்பதிகம் என்றும் சேக்கிழாரால் பாராட்டப்பெற்ற முதற்பதிகத்தின் திருக்கடைக்காப்புச் செய்யுள் மேலே குறிப்பிடப் பெற்றது.

அருநெறியை உடையது மறை; பெருநெறியை உடையது பிரமாபுரம்.

அருநெறியை உடைய மறையில் வல்லமை பெற்றவன், பிறருக்கு அறிவுறுத்தியவனும்கூட ஆனால், அருநெறியில் வல்லவன் என அவன் அறியப்பெற்ற காலத்தே அவன் முனிவன். அருநெறியில் அவனை நினைய முடியுமேயொழிய அறிந்து பின்பற்றப் பெற முடியாதவன்.

பிரமாபுரம் பெருநெறியை உடையது. இங்கே பேரருளாட்டியாகிய, பேரருளை வளர்ப்பவளாகிய, பெண்ணில் பெரியவளோடு பெருந்தகையாகத் தானே விரும்பித் தங்கியிருக்கிறான்.

அருமையை உணரமுடியும்; பெருமையைப் பேசமுடியும். மறைதந்த அருநெறி முன்னது; பிரமாபுரம் விளக்கும் பெருநெறி பின்னது. முதற்பதிகத்தின் திருக்கடைக்காப்பில் வரும் **அருநெறி, பெருநெறி, ஒருநெறி, திருநெறி** என்ற நான்கன் பொருள் நிலைகளைத் தெளிய் உணர்தல் வேண்டும்.

அருநெறியாம் மறைநெறியும் பிரமாபுரப் பெருநெறியும் ஆகிய இரண்டும் ஒன்றன் இருபக்கங்கள் போல அமைவன. அவைகளைத் தன்னுள் அடக்கி, அவைகளை இணைத்து, அவ்விணைப்பின் ஆதாரமாய் விளங்கும் நெறியே ஒரு நெறி. இருமை நெறிகளையும் இணைத்துக் கடந்ததாய் நின்ற நெறியே ஒருமை நெறி. அவ்வொருமை நெறியானது மறைநெறியையும் பிரமாபுரப் பெருநெறியையும் அழித்துத் தோன்றியதன்று; அணைத்துத் தோன்றியது. இருமையை இணைத்தது மட்டுமேயன்றி, இருமையை ஒட்டி எழுந்தும் கடந்தும் அதே நிலையில் இருமைக்கு ஆதாரமாகவும் நின்ற நெறி.

இருமையின் ஒருமையாய் நின்ற நெறியைத் தொண்டின் அடிப்படையில் நிறுத்தி, அனுபவத்திற்கு உரியநிலையில் அமைந்த இன்ப அனுபவநெறியே-தமிழ் நெறி. என்ற விளக்கத்தின் அடிப்படையில் வெளிவந்த தொடரே **'திருநெறிய தமிழ்'** என்பது. இதை விளக்கும் முறையிலேயே நம்பியாண்டார் நம்பிகள்,

"ஆறதேறும் சடையான் அருள்மேவ
வீறதேறும் தமிழால் வழிகண்டவன்"

என்று போற்றுவாராயினர்.

இனி, திருஞானசம்பந்தரே அமைத்துக் காட்டும் இரண்டாவது சான்று ஒன்றனையும் காணலாம்.

திருக்கடைக்காப்பு என்றும் தேவாரம் என்றும் திருப்பாட்டு என்றும் சொல்லப்பெறும் பெயர்கள் முறையே திருஞானசம்பந்தர் தமிழையும் திருநாவுக்கரசர் தமிழையும்

சுந்தரர் தமிழையும் குறிப்பன. மூவர் தமிழையும் அவை கூறும் பொருள்பற்றி ஆய்வுநடத்திய அருளாளர் இருவர். ஒருவர் அகத்தியர் மற்றவர் உமாபதி சிவாசாரியார்.

சிவாலய முனிவர் என்பார் தேவாரப் பதிகங்கள் அனைத்தையும் நாள்தோறும் ஓதவேண்டும் என்ற பெருவிருப்புடையராய், அவற்றை எவ்வாறு வகைப்படுத்து ஓதுதல் இயலும் என எண்ணி, அவ்வெண்ணத்தை முற்றுவித்தருளுமாறு தில்லைக் கூத்தனிடம் முறையிட்டார். கூத்தப்பெருமான் அவரை அகத்தியரிடம் செல்லுமாறு பணித்தார். சிவாலயமுனிவரும் அகத்தியனாரிடம் சென்று தம் குறையை விண்ணப்பித்தார். அகத்தியனார் 'தேவாரம் முதலிய பொருள் எட்டு' என வரையறை செய்து, அந்த எட்டுத்தலைப்புக்களில் மூவர் தமிழிலும் உள்ள பதிகங்களை இணைத்து எடுத்துக்காட்டி இவற்றை மட்டும் நாளும் ஓதியருளுக எனப் பணித்தார். அவ்வாறு திரட்டப் பெற்ற பதிகங்கள் 'அகத்தியர் தேவாரத்திரட்டு' என்ற பெயரால் வழங்கப் பெறுகின்றன. மூவர் தமிழின் முடிநிலையாயும் அடிநிலையாயும் அமைந்த பொருட் கூறுகள் எட்டு என்பதை உணர்த்தும் பாடல் கீழே தரப்பெற்றுள்ளது.

"குருவருளும் வெண்ணீறு எழுத்தஞ்சும் கோயில்
அரனுருவும் என்தலைமே லாக்கும் - திருவடியும்
இட்டான அர்ச்சனையும் தொண்டும் சிவாலயர்க்கென்று
இட்டார் அகத்தியனார் எட்டு"

- அகத்தியர் தேவாரத்திரட்டு, காசிமடப்பதிப்பு, 1956, பக்.9.

குருவருள், வெண்ணீறு, திருவைந்தெழுத்து, கோயில், அரனுரு, திருவடி, அர்ச்சனை, தொண்டு என்பனவே அவை.

எட்டிறந்த வகையில் பத்து என நிறுத்தி ஆராய்ந்தவர் உமாபதி சிவாசாரியார். சந்தானாசாரியர்களில் இறுதி நின்ற உமாபதி சிவாசாரியார் 'தேவார அருள்முறைத் திரட்டு' என்ற ஒரு திரட்டினை அமைத்துள்ளார். அத்திரட்டின் அடிப்படையில் திருவருட் பயன் என்ற சாத்திர நூலையும் அருளிச் செய்துள்ளார்.

பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருள்மலநிலை, அருளதுநிலை, அருளுருநிலை, அறியும் நெறி, உயிர் விளக்கம், இன்புறுநிலை, அஞ்செழுத்து அருள் நிலை, அணைந்தோர் தன்மை என்ற பத்து வகையான பொருள்களின் அடிப் படையில் திரட்டியுள்ளார்.

சிவாலயமுனிவருக்காக அமைந்த அகத்தியர் தேவாரத்திரட்டானது ஓதுவதற்காகவும் உமாபதி சிவாசாரியாரின் அருள்முறைத் திரட்டானது மெய்ப் பொருளுணர்வுக்காகவும் திரட்டப் பெற்றன என்று கொள்ளலாம். எனினும் மூவர் தமிழுக்கும் பொருள் அடிப்படை காணமுற்பட்டனர் இருவரும் எனக் கொள்வதில் தவறில்லை.

ஆயினும், திருஞானசம்பந்தர் தேவாரத்துக்கு மட்டும் ஒரு பொருளாய்வு நடைபெற்றிருக்கிறது. அதைச் செய்தவர் திருஞானசம்பந்தரே.

திருஞானசம்பந்தர் சீகாழிப்பெரும்பதியில் உறைகின்ற நாளில் திருத்தோணி வீற்றிருந்தாரைத் தூக்கின் தமிழ்மாலை பாடித்தொழுது வருதலை வழக்கமாகக் கொண்டிருந்தார்.

"சிவபாதவிருதயர் நாளும் நித்திய அநுட்டானங்களை முடித்தவுடன் ஓதினோர்க்குப் புத்தி புத்திகளைத் தரத்தக்க பிள்ளையாருடைய திருப்பதிகங்களைப் பாராயணம் செய்து உணவுண்ணும் நியமம் மேற்கொண்டிருந்தார். அங்ஙனம் சிலகாலம் நிகழ்ந்து வரும்போது, ஞானசம்பந்தப் பெருமானின் திருப்பதிகங்கள் பெருகுதல் பற்றி, தந்தையார் கருத்து முற்றுப்பெறுதலின் உள்ள அருமையை நோக்கி, முற்றுணர்வுடைய ஆளுடைய பிள்ளையார் அதுவரையிற் பாடியருளிய திருப்பதிகங்களின் பொருளை அமைத்து "ஓருருவாயினை" என்னும் திருவெழுகூற்றிருக்கையைத் திருவாய் மலர்ந்தருளி, இதனைத் தினந்தோறும் நியமமாக ஓதினோர் திருப்பதிகங்கள் முற்றும் ஓதிய பயன்பெறுவர் எனச் சிவபாத குருபரர்க்கு அருளிச் செய்தார்"

தேவாரம் _ தலமுறை _ சங்கரமடத்துப்பதிப்பு பக். 188_189.

சிவபாத இருதயருக்காகத் திருவெழுகூற்றிருக்கைப் பதிகத்தை அருளிச் செய்கின்றார் திருஞானசம்பந்தர் என்ற கருத்தைச் சேக்கிழார்,

"செந்தமிழ் மாலை விகற்பச் செய்யுட்களால் மொழி
மாற்றும்
வந்தசொற் சீர்மாலைமாற்றும் வழிமொழி எல்லாமடக்குச்
சந்த வியமகம் ஏகபாதம் தமிழ் இருக்குக்குறள் சாத்தி
எந்தைக்கு எழுகூற்றிருக்கை ஈரடி ஈரடி வைப்பு"

-பெரியபுராணம்- திருஞானசம்பந்தர் புராணம். 276.

என்ற செய்யுளாற் குறிப்பிட்டருளினார். 'எந்தைக்கு' என்பதை ஞானசம்பந்தரின் தந்தைக்கு என்று பொருள் கொள்ளும் வழக்கம், மரபு நெறியிற் காணப் பெறுவதொன்றாம்.

'திருவெழுகூற்றிருக்கை' என்பது எண் அலங்காரம் அமையப் பாடப்பெறும் ஒருவகைச் சித்திரக்கவி என்று கூறுவர். ஒன்றுமுதல் ஏழுவரை உள்ள எண்களை வரிசைப்படுத்தித் தேர்போல் அமைத்துப் பாடும் முறை என இதற்குச் சித்திரம் வரைந்து காட்டியுள்ளனர். 47 வரிகளில் அமைந்த இஃது ஒரே பாட்டாயினும் ஒருபதிகமாகவே கொள்ளும் மரபு இருந்திருக்கிறது.

இத்திருவெழுகூற்றிருக்கைத் திருப்பதிகத்துள் முதல் உள்ள 19 வரிகளில் அருநெறியாம் மறைவல்ல முனிவரின் அருமைகள் கூறப்பெறுகின்றன. 20-ஆம் வரிமுதல் பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, காழி கொச்சைவயம் என்ற பதினொரு பெயர்களின் பெருமையும் அவைகளை அடிப்படையாக் கொண்டு பெருமான் செய்த செயல்களையும் புகழ்ந்தெடுத்துப்பேசுகின்றார். இவ்வகையில் அரு நெறியையும் பிரமாபுரப் பெருநெறியையும் இணைத்துக் காட்டி, இருமையைக் கொண்ட ஒரு நெறி என்று விளங்கிக் கொள்ள வைத்தார். அதை விளக்கும் வகையில்,

**இருமையின் ஒருமையும்**
**ஒருமையின் பெருமையும்**

என்று கூறி, அதனை, மறுவிலா மறை ஓர் கழுமல முதுபதிக் கவுணியன் கட்டுரை என்றுகூறிச் சிறப்பிக்கின்றார். இறுதியில் திருக்கடைக்காப்பு அமைக்கும் முறையில்,

"கழுமல முதுபதிக் கவுணியன் அறியும்
அனைய தன்மையை ஆதலின் நின்னை
நினைய வல்லவர் இல்லை நீள்நிலத்தே"

என்று கூறி முடித்தருளுகின்றார். இதனுள் அருநெறியையும் பெருநெறியையும் தன்னுள் இணைத்ததாய் நிற்பதும் இரண்டை ஒட்டிவளர்ந்துள்ள பெருமையாய் நிற்பதனைத் "திருநெறி" என்பதாக முடித்துக்காட்டி, அவனை அனுபவத்துக்குள்ளாக்கும் தமிழ் ஆதலின் திருநெறிய தமிழ் எனக் கூறி விளக்கினார் எனக் கொள்ளலாம்.

காரைக்கால் அம்மையார் 'அற்புதத்திரு' எனக் கூறி அமைத்ததன் உள்ளக்கிடக்கையையே விளக்கும் வகையில் திருஞானசம்பந்தரின் இருமையின் ஒருமையும் ஒருமையின் பெருமையும் என்ற கருத்து அமைந்துளது என்பதை மேற்போக்கில் நோக்குவார்க்கே நுண்ணிதிற் புலனாவதாம்.

## திருநின்ற செம்மை

"திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட
திருநாவுக்கரசன் தன் அடியார்க்கும் அடியேன்"

என்பது சுந்தரர் பெருமான் திருநாவுக்கரசரை எடுத்தியம்பி அடிமை கூறும் தொடர் (திருத்தொண்டத்தொகை_4). சுந்தரர் பெருமான் இத்தகைய தொடரை அருளுவதற்குக் காரணம் திருநாவுக்கரசு பெருமான் தம்முடைய தேவாரப் பதிகங்களில் இத்தொடரைக் குறிப்பிடுவதே.

"சிவனெனும் ஓசையல்லது அறையோ உலகில்
திருநின்ற செம்மை உளதே" (4. 8. 1.)

என்றும்

"சிவனெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்"
(4.112.9)

என்றும் கூறியுள்ளார் திருநாவுக்கரசர்.

திருநாவுக்கரசரின் இந்தத் தொடரில் அமைந்துள்ள அனுபவ நுட்பத்தை மிகவும் வியந்த நிலையிலும் அடியவர்களை முறையாக அறிமுகப்படுத்த வேண்டும் என்ற வரலாறு தழுவிய கொள்கைநிலையிலும் கருத்தூன்றி நின்ற காரணத்தாலேயே சுந்தரர் பெருமான் "திருநின்ற செம்மையே செம்மையாக் கொண்ட திருநாவுக்கரையன்" என்று குறிப்பிடுவாராயினர்.

மேலே குறிப்பிடப்பெற்ற இரண்டு இடங்கள் தவிர, அனைவரும் சிறப்புற எடுத்துக்கூறும் இடமும் ஒன்று உண்டு.

"மெய்ம்மையாம் உழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்மையாம் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மையும் நோக்கிக் கண்டு
தகவு எனும் வேலி இட்டுச்
செம்மையுள் நிற்பராகில்
சிவகதி விளையும் தானே.
(4. 76. 2)

என்னும் தேவாரத்திலும் அப்பரடிகள் 'செம்மையுள் நிற்றல்' என்ற செய்தியைக் குறிப்பிட்டருளுகின்றார்.

"திரு என்பதற்கு இன்பம் என்றும் அது நிலைபெற்று நிற்றலாகிய செம்மையே உண்மைச் செம்மை அத்தகைய செம்மையை உடைய செம்பொருளாவான் சிவனே எனவும் உரைகொண்டார் மகாவித்வான் அருணை வடிவேலு முதலியார் அவர்கள் [ஏழாந்திருமுறை - பக். 309. தருமைப் பதிப்பு]

ஆனால், திருநாவுக்கரசின் திருப்பதிகத் தொடராகிய "சிவனெனும் ஓசையல்லது அறையோ உலகில், திருநின்ற,



செம்மை உளதே" என்பதற்கு உரைவிளக்கம் காணும் மகாவித்வான் அவர்கள், திரு என்பதை நன்மை என்பதாக கொள்ளலாம் என்றும் வடமொழியில் உள்ள சிவம் என்ற சொல்லுக்கு நேரான தமிழ்ச்சொல்லாகவே திரு என்பதைக் கொள்ளலாம் என்றும் உரை காணுகின்றார்.

"சிவனெனும் ஓசையல்லது" எனத் தொடங்கும் பதிகத்தில் ஒருவகை இருமையை உணர்த்தி, இருமையை உள்ளிட்ட ஒருமையையே தேவர்களும் அகம்கொள்ளுவர் என்று குறிப்பிடுகின்றார்.

"சிவனெனும் ஓசையல்லது அறையோ உலகில்
திருநின்ற செம்மை உளதே
அவனும் ஓர் ஐயமுண்ணி அதளாடை அரவது
அதன்மேல் ஓர் ஆடல் அரவம்
கவணளவுள்ள வுள்கு கரிகாடுகோயில்
கலனாவதோடு கருதில்
அவனது பெற்றிகண்டும் அவன் நீர்மைகண்டும்
அக நேர்வர் தேவர் அவரே"

என்றும் அடுத்த திருப்பாடலில்,

"விரிகதிர் ஞாயிறல்லர் மதியல்லர் வேத
விதியல்லர் விண்ணும் நிலனும்
திரிதரு வாயுவல்லர் செறுதீயும் அல்லர்
தெளிதரு நீருமல்லர் தெரியில்
அரிதரு கண்ணியாளை ஒரு பாகமாக
அருள் காரணத்தில் வருவார்
எரியரவு ஆரமார்பர் இமையாரும் அல்லர்
இமைப்பாரும் அல்லர் இவரே"

என்று கூறுவதையும் நோக்கினால் இருமைக்கும் நடுவிலே செம்மைப்பொருளாக நிற்கும் பொருளுண்டு என்ற கருத்தையே குறிப்பிடுவதாகக் கொள்ளவேண்டும்.

சிவன் என்னும் சொல்லால் உணரப்பெறும் பொருள் ஒன்று உண்டு. உலகில் திரு என்ற சொல்லுக்குரியதாய் நின்ற நடுநிலைப்பொருள்- ஒளிப்பொருள் ஒன்று உண்டு.

அஃது இமைப்பாராகவும் இமையாராகவும் நின்ற இருநிலைகளைக் கடந்ததாய் நின்ற செம்பொருள். அஃது ஒலியால் திரு என நின்றது ஒளியால் செம்மைச் சோதி; செயலால் இருமையை உள்ளடக்கிக் கடந்த அருள்நிலைப் பொருள். இவ்வாறு மும்மைநிலைகளையும் உடன் கொண்டதாக அமைந்த பொருளையே, "திருநின்ற செம்மை" என்ற குறிப்பில் கூறினாராகக் கொள்ள வேண்டும்.

இனி, அப்பரடிகள் குறிப்பிடும் வேறொரு கருத்தையும் உடன் நோக்கிச் சிந்தித்தல் வேண்டும்.

சிவகதி என்னும் பயிர் விளைவதற்குரிய வழியைச் சொல்லும் நிலையில் உழவராகிநின்று உற்றபல கடமைகளைச் செய்ய வேண்டும் என்று கூறுகின்றார்.

மெய்மை பொய்மை என்ற இருமைகளை உணரவேண்டும். மெய்மையை மூலநிலமாக்கிப் பொய்மையைக் களைந்து நீக்க வேண்டும். விருப்பம் பொறுமை என்ற இரண்டையும் விதையும் நீருமாகக் கொள்ள வேண்டும். தகவு என்னும் நடுவுநிலைமையை வேலியாக அமைத்துத் தம்மையும் நோக்கிக் காணுதல் வேண்டும். இவைகளையெல்லாம் இணைத்துநின்ற 'செம்மை' என்ற அடிநிலைப் பொருளை உணர்ந்து அதனை இடமாகக் கொண்டு நிற்றல் வேண்டும்.

மேற்கூறியவாறு நின்றால் சிவகதியைத் தேடிச்செல்ல வேண்டிய அவசியம் இல்லை. சிவகதியானது நம்மிடத்திலேயே விளைந்து அனுபவப்படும் என்றார்.

1. மெய்மையைச் சார்ந்து பொய்மையை விலக்குதல் ஒருவகை.

2. உடலைவிட உயர்ந்தது உயிர் என்றாலும் இறைவனை நோக்க உயிர் தாழ்ந்தது எனத் தம்மை நோக்கிக் கண்டு தகவு எனும் வேலி இடுதல் வேண்டும்.

3. இருமைகளைக் கடந்த செம்மைப்பொருள் நம்முள் இருக்கிறது எனக்கண்டு அதன்மேல் அசையாது நிற்றல்.

மேற்கூறிய மூன்றையும் முறையே நன்மை, உண்மை, செம்மை என்ற் 'மும்மைப் பொருளாகக் கொள்ளலாம். மூன்றையும் முழுநிலைப்படுத்திநின்றால் அது திருநின்ற செம்மை எனப் பெறும். இவ்வாறு அப்பரடிகள் திருநின்ற செம்மை என்பதற்கு விளக்கம் கொடுப்பதாக அமைத்துக் கொள்ளலாம்.

## சேக்கிழார் காட்டும் திரு

சமய நெறிகளின் வன்மை மென்மைகள் மட்டுமேயன்றி, மெய்ப்பொருளியலின் உண்மை நிலைகளை ஒளிவுமறைவு இன்றித் திருவருள் நெறியில் நின்று உலகுக்குணர்த்திய பெருமை சேக்கிழார் அடிகளையே சாரும்.

"உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்" என்ற வரி முழுவதுமே இறைவனால் அருளப்பெற்றது என்று கூறுவார் இராமலிங்க அடிகள். 'உலகெலாம்' என்ற இருசொல் ஒரு தொடரே அனைவர் செவிகளிலும் கேட்டது என்றும் உலகெலாம் உணர்ந்து ஓதற்கரியவன் என்ற முழுத்தொடரும் சேக்கிழாரடிகளுக்குக் கேட்டது என்றும் வள்ளற்பெருமானே எடுத்துரைக்கிறார். அஃது அருநெறி ஆயினமையின் அவனாலேயே உணர்த்தப்பெற்றது.

நிலவுலாவிய நீர்மலிவேணியன் என்பது அடுத்து நின்ற தொடரால் குறிக்கப்பெறும் நெறி பெருநெறி. அருநெறியையும் பெருநெறியையும் இணைத்து நின்றநிலையில் இருமையை இணைத்த ஒருமையாய் 'அற்புதத் திரு' என நின்ற நெறியே திருநெறி எனப்பெறும் அலகில் சோதியனாம் நெறி.

அருநெறியையும் பெருநெறியையும் இணைத்த திருநெறியாம் சோதிப்பொருளே குருநெறியாய் நின்று உணர்த்தியும் அருளனுபவத்தை அடைவித்து நின்றதும் ஆகிய செயற்பாட்டு நிலையில் நின்றபோது குருநெறி எனப் பெறுவதாய் 'அம்பலத்தாடுவான்' என நின்றது.

அம்பலத்தாடுவான் எனநின்றது குருநெறியே என்பதைப் "போதியாநிற்கும் தில்லைப்பொதுநடம்" என்ற

பெரியபுராண, தில்லைவாழந்தணர் புராணத்து முதற்பாட்டால் அறியலாம். அதுவே திருநெறிய தமிழாய்-திருவருளனுபவமாய் நின்று சிறந்தது என முதன்மைப் பாசுரத்தால் முழுமையை உணர்த்தும் அருள்நெறிச் சான்றோராக நின்ற பெருந்தகையே சேக்கிழார் அடிகள்.

திருத்தொண்டு வாழவந்த நிலையில் திருப்பதிகப் பெருவழி தந்தவர் எனத் திருஞானசம்பந்தரையும் வளர் திருத்தொண்டின் நெறி வாழ வருஞானத்தவமுனிவர் வாகீசர் எனத் திருநாவுக்கரசரையும் எடுத்துக்காட்டி, உயிர்களின் அருள் வாழ்க்கையை எடுக்கும் மாக்கதை என்று உலகறியப் பேசிய பெருந்தகை சேக்கிழாரடிகள்.

'திரு' என்ற செம்பொருட்சொல்லுக்கு மூன்று வகையான விளக்கங்களைச் சேக்கிழார் திருவாக்கில் காண முடிகிறது. தில்லைவாழந்தணர்களை முதன்மைப் பொருளாகக் கொண்டு திருத்தொண்டத்தொகை தொடங்கப்பெறுதலின் தில்லைவாழந்தணர்களையும் திருத்தொண்டர்களையும் இணைத்து நிறுத்தியே அவர்தம் இயல்புகளை விரித்துரைக்க முற்படுகின்றார் சேக்கிழார். ஆயினும் காப்பியத் தொடக்கம், வரலாற்று அமைப்பு ஆகியவைகளை உடன்கொண்டு, திருத்தொண்டர்களின் சிறப்பினைத் திருக்கூட்டச்சிறப்பு என்ற தலைப்பிலும் தில்லைவாழந்தணர்களாகத் திருத்தொண்டத்தொகை அமைப்பில் பின்னர் நிறுத்தியும் விளக்கியருளுகின்றனர். திருத்தொண்டர்களின் சிறப்பை விளக்கும்போது,

**"கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்**
**ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்**
**கூடும் அன்பினிற் கும்பிடலே அன்றி**
**வீடும் வேண்டா விறலின் விளங்கினார்".**

-பெரியபுராணம், திருக்கூட்டச்சிறப்பு 8.

என்று கூறிய சேக்கிழார், தில்லைவாழந்தணர்களைக் குறிக்கும்போது,

"திருநடம்புரிவார்க்கு ஆள் ஆம் திருவினிற் சிறந்த சீரார்"

என்றும்

"தகுதியின் பகுதி சார்ந்தார்,
ஊனமேல் ஒன்றும் இல்லார்"



என்றும்

"தம்மையே தமக்கொப்பான நிலைமையால் தலைமை சேர்ந்தார்' என்றும் முறையே தில்லைவாழ்ந்தணர் புராணத்து 5, 7, 8 - ஆம் பாடல்களிற் குறிப்பிட்டருளினார்.

அடியவர்களின் பெருமை பேசும் சேக்கிழார் 'திரு' என்பதற்கு விளக்கம் கொடுக்கும் வகையில் "கேடும் ஆக்கமும் கெட்ட திருவினார்" என்று அமைக்கின்றார். இங்கே இருமையை முற்றாக வெறுத்தொதுக்கிய ஒருமை என்ற வகையில் 'திரு' என்பதற்கு விளக்கம் அளிக்கிறார்.

திருவாரூரில், இறைவன் திருவாயாலேயே புகழ்ந்து எடுத்துப் போற்றப்பெறும் பெருமையுடையவர் தில்லை வாழந்தணர் என்ற கருத்தை,

"தென்தமிழ்ப் பயனாய் உள்ள
திருத்தொண்டத்தொகை முன்பாட
அன்று வன்தொண்டர் தம்மை
அருளிய ஆரூர் அண்ணல்
முன் திருவாக்கால் கோத்த
முதற்பொருளானார்"

என்ற தில்லைவாழந்தணர் புராணத்து ஒன்பதாம் பாடலிற் கிளந்த சேக்கிழார், இறைவனே நேர்நின்று, தம்வாக்காலேயே திருத்தொண்டர் பெருமையைச் சொல்வதாக ஒரு பாடலை அருளிச்செய்கின்றார்.

தம்மை அடையவேண்டும் என்றும் தம் திருவடிகளைச் சரண்புக வேண்டும் என்றும் இறைவன் பெருமையைக் கூறுவதாக மெய்ப்பொருள் துறை சார்ந்த உரைகளெல்லாம் முழங்கவும் மாறாக, இறைவனே நேர்நின்று, இறைவன்

திருவாக்காலேயே, "இவரை நீ அடைவாய்" என்று கூறிய பெருமைய்யை உணர்த்துவதாகவும் அப்பாடல் அமைகிறது.

"பெருமையால் தம்மை ஒப்பார்
பேணலால் எம்மைப் பெற்றார்
ஒருமையால் உலகை வெல்வார்
ஊனம் மேல் ஒன்றும் இல்லார்
அருமையாம் நிலையில் நின்றார்
அன்பினால் இன்பம் ஆர்வார்
இருமையும் கடந்து நின்றார்
இவரை நீ அடைவாய்" என்று,

-பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட புராணம் 196.

'தம்மையே தமக்கொப்பான நிலைமையுடையவர்' என்று தில்லைவாழந்தணர்களைக் கூறியது போன்றே "பெருமையால் தம்மை ஒப்பார்" என்று திருத்தொண்டர்களைப் போற்றிக் கூறிய பெருமை சேக்கிழாருக்குரியது. இனி,

"இருமையும் கடந்துநின்றார்"

என்றும்

"ஒருமையால் உலகை வெல்வார்
ஊனம்மேல் ஒன்றும் இல்லார்"

என்றும் கூறிய கருத்துக்களை இணைத்துச் சிந்திக்க வேண்டும்.

"இருமையைக் கடந்துநின்ற ஒருமை" இங்கே பேசப்பெறுகிறது. அதற்கு ஒப்பவே,

"கேடும் ஆக்கமும் கெட்டதிரு"

என்ற முறையில் திருவின் விளக்கம் பேசப்பெறுகிறது.

இனி, சேக்கிழார் பெருமான் கடவுள் விளக்கமாகக் கூறும்போது சில விளக்கங்களை அளிக்கின்றார்.

"பேதியா ஏகம் ஆகிப் பெண்ணுமாய் ஆணுமாகிப்
போதியா நிற்கும் தில்லைப் பொது"

-பெரியபுராணம், தில்லைவாழந்தணர்புராணம் 1

என்று குறிப்பிட்டுக் கூறுகின்றார். இங்கே, இருமை நீக்கிய ஒருமை பேசப்பெறவில்லை. **இருமையைப் புறக்கணிக்காத** ஒருமை பேசப்பெறுகிறது.

இனி, சைவசித்தாந்தக் கொள்கையில் 'அருவுருவம்' ஏற்கப்பெறுகிறது. அருவுருவம், பேதாபேதம் ஆகிய கொள்கைகள் பேசப்பெற்றாலும் அவைகளை இணைத்துநின்ற நிலை பேசுதல் கூடாது. பேசுதல் முரண். அஃதாவது அருவத்தையும் உருவத்தையும் இணைத்துநின்ற உருவம் என்றோ பேதத்தையும் அபேதத்தையும் இணைத்துநின்ற பேதாபேதம் என்றோ பேசுதல் கூடாது.

ஒருவகையால் உருவமும் ஒருவகையால் அருவமும் என்று கூறுதலும் ஒருவகையாற் பேதமும் ஒருவகையால் அபேதமும் என்று கூறுதலும் மெய்ப்பொருள் அடிப்படையில் குற்றமே. ஒருவகையால் பொய்யும் ஒருவகையால் மெய்யும் இருக்கலாம் எனக் கொண்டு,

"பொய்மையும் வாய்மை இடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்"

என்ற திருக்குறளுக்கு உரை கொள்வதுபோல, இலக்கியம் ஏற்கலாம்; உலகியல் ஏற்கலாம்; அற இயலோ மெய்ப்பொருளோ ஏற்பதில்லை. எனவே, இலக்கிய இயல் அடிப்படையான விளக்கத்தை மெய்ப்பொருளியல் விளக்கமாக அமைத்துக் கூறுதல் கூடாது. அதற்குச்சான்றாக அமையும் இறைஇலக்கணமாகச் சேக்கிழார் கூறுவதை நுனித்து நோக்குதல் வேண்டும்.

"காணாத அருவினுக்கும் உருவினுக்கும் காரணமாம்
நீள்நாகம் புனைந்தார்க்கு நிகழ் குறியாம் சிவலிங்கம்"

–பெரியபுராணம், சாக்கியநாயனார் புராணம் 8.

என்ற பாடலில் அருவம், உருவம் என்ற இணைப்பாகக் கூறவில்லை. இருமைக்கு மூலமாக இருந்த ஒருமை என்று இருமைக்குக் காரணமாக இருந்த ஒருமை "என்ற இலக்கணத்தையே வலியுறுத்திக் கூறியுள்ளார். இதனைப் 'பேதியா ஏகம்' என்றதனோடு ஒப்பக் கொள்ளலாம்.

## திருக்குறள்

மேலே கூறப்பெற்ற பக்தி இலக்கியங்களுக்கு அப்பால் அறநிலையில் நின்று இலக்கண இலக்கியம் வகுத்த அருளாளராம் திருவள்ளுவப் பெருந்தகை 'நீத்தார் பெருமை' என்ற ஓர் அதிகாரம் வகுத்தமைக்கிறார்.

'நீத்தார்' என்ற சொல்லை விளக்கும் வகையில் "ஒழுக்கத்து நீத்தார்" என்றே குறிப்பிடுகிறார்.

இல்லற ஒழுக்கம் துறவற ஒழுக்கம் ஆகிய ஒழுக்கங்களின் நின்று இருமை வகைதெரிந்து, அவற்றை மருவி உயர்ந்ததாகிய ஒருவகை அறத்தை மேற்கொண்டு ஒழுகுகிறார்கள் என்றே விளங்கிக்கொள்ள வேண்டியிருக்கிறது.

அவர்களை,

"இருமை வகை தெரிந்து ஈண்டு அறம் பூண்டார்
பெருமை பிறங்கிற்று உலகு"

–குறள் 23.

என்று குறிப்பிட்டுக் காட்டுகின்றார். இங்கே பேசுவது,

"இருமையை உள்ளடக்கிக் கடந்த ஒருமை"

என்று கொள்ளலாம்.

## தொல்காப்பியம்

தமிழர்தம் வாழ்வியலைத் திட்டமிட்டு உணர்த்தும் இலக்கணமாகத் திகழ்வது தொல்காப்பியம் என்பது வரலாற்றுண்மை.

தொல்காப்பியத்தில் கடவுட்கொள்கை பேசப்பெறுகிறது. அதற்குத் தலையாய இரண்டு சான்றுகளைக் காணலாம்.

**"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்**
**ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்**
**ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப**
**மிக்கோன் ஆயினும் கடிவரை இன்றே"**

**தொல்காப்பியம் ,1039.**

என்ற தொல்காப்பியக் களவியல் இரண்டாம் நூற்பாவில் முன்னிரண்டு வரிகளில் கடவுள் இயல்பு பேசப்பெறுகிறது.

"ஒன்றியிருக்கும்படிச் செய்தல் வேறாகப் பிரித்து வைத்திருக்கும்படிச் செய்தல் என்ற இருவகை ஊழ்களில் பல பிறவிகளில் ஒன்றியிருக்கும்படிச் செய்து அதனால் அன்பு உயர்தற்கு ஏதுவாகிய ஒருவகை ஊழினது ஆணையால்"

என்று தொல்காப்பியக் குறிப்புரையாசிரியர் இளவழகனார் உரை எழுதியுள்ளார்.

'பால்' என்பதற்கு 'ஊழ்' என்று பொருள் கொள்வது இயல்பே. ஆயினும் ஊழே அனைத்தும் செய்கிறது என்பது பௌத்த சமணக் கொள்கை. அஃது அறிவற்றது ஆதலின் அதனைச் செயற்படுத்துவது அறிவுள்ள பொருளாகிய இறைவனின் ஆணை என்பது கடவுட்கொள்கை உடையார் அனைவர்க்கும் ஒப்ப முடிந்த கருத்து ஆதலின் கடவுட் கொள்கையை உடன்பட்டுப்பேசும் தொல்காப்பியர் கருத்து இறைவனைப் பற்றியதேயாகும். மேலும், ஒன்றே, வேறே என்ற இருசொற்களும் கூட்டுதலும் பிரித்தலுமாகிய இருமையை அடிப்படையாகக் கொண்ட ஊழின் அமைப்பு என்று உரையெழுதிவிட்ட பிறகு, 'ஒன்றி உயர்ந்த பால்' என்பது அவற்றை உடன்கொண்ட பிரிவாக இருக்க

வேண்டுமேயன்றி, பிறவிதோறும் ஒன்றி உயர்ந்த பால் என்று மூன்றாவது ஒருவகையைக் கொண்டு வந்து புணர்த்தல் இயலாததாகும் என்பதும் அந்த உரையில் எழும் சிக்கல்.

ஒன்றும் வேறும் என நிற்றல் உலகியல் அடிப்படைக் கொள்கை. நன்மை தீமை, இன்பதுன்பம், இரவுபகல், உடன்பாடு எதிர்மறை போல்வன இருவகை எதிர்நிலைகள்.

இருமையைக் கொண்டால்தான் இடைநிலை அமையும்.

ஆண்மை பெண்மை என்றாற்போல, அறம் புறம் என்றாற்போல இருமைகள் காணப்பெறுதல் உலகியற்கை. இருமையை ஒட்டி இடையில் நின்று, இருமையைக் கடந்ததாக அமையும் பால் ஒன்று உண்டு. அதுவே இறைநிலை.

ஒன்று, வேறு எனநின்ற இருவகைப் பிரிவுப் பொருள்களை இடமாகக் கொண்டு (என்றிரு பால்வயின்) அவைகளைப் பொருந்திநின்றும் அதே சமயத்தில் அவைகளைக் கடந்து உயர்ந்தும் நிற்பதும் ஆகிய பொருள் ஒன்று உண்டு. அப்பொருள் அமைத்த ஆணையின் வழியே "ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப" என்று கூறும் பொருளையும் சிந்தித்தல் வேண்டும்.

இத்தகு பொருள்நிலையை உளங்கொள்வோமானால் தொல்காப்பியர் இந்நூற்பாவாற் கூறும் பொருள் திருஞானசம்பந்தர் அருளுமாறு,

இருமையின் ஒருமையும்
ஒருமையின் பெருமையும்

என்பதாக அமையும் எனக் கொள்ளலாம்.

அடுத்து, தொல்காப்பியப் புறத்திணையியலில் வரும் 33-ஆம் நூற்பாவைக் கருதுதல் வேண்டும்.

"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் முதலன மூன்றும்
கடவுள் வாழ்த்தோடு கண்ணிய வருமே"

- தொல்காப்பியம் 1034.

கடவுள் என்ற சொல்லுடன், அச்சொல்லின் பண்பை விளக்கும் வகையில் கொடிநிலை, கந்தழி, வள்ளி என்ற மூன்று சொற்களும் அமைத்துக் காட்டப் பெறுகின்றன.

'கொடிநிலை' என்பது இருமையின் ஒருமை. ஏறுதலும் இறங்குதலும் ஆகிய வட்டம் அமையும் இருநிலைகளைக் கொண்ட ஒருமை. இதுவே அருள் நிலை. உயிர்களை நோக்கி வருதலும் உயிர்களை மேலேற்றுதலும் ஆகிய இருமையை இணைத்த ஒன்று.

கந்தழி என்பது பற்றுதலும் பற்றறுதலும் ஆகிய இருமையால் உணரப்பெற்றாலும் இருமையை நீத்த ஒன்றே கந்தழி. இதுவே அனைத்துப் பற்றுக்களையும் அழித்து நின்ற பரமப்பொருள் நிலை.

வள்ளி என்பது தானும் வன்மையாயிருந்து பிறரையும் வன்மையுடையவனாக ஆக்கும் நிலை.

## தொகுப்புரை

காரைக்காலம்மையாரை முதற்கொண்டு தொல்காப்பியர் வரை நின்ற ஆறு அருளாளர்களின் கருத்துக்களின் அடிப்படையில் 'திரு' என்பதன் பொருள்கள் தொகுத்துரைக்கப்பெற்றன. இவைகளை வகைப்படுத்தி ஒருமைப்படுத்தி நிறுத்தினால் கீழ்க்கண்ட மூன்று விளக்கங்கள் அமையும்.

1. இருமையின் ஒருமை: இருவேற்றுமைகளைச் சமநிலைப்படுத்தி நிறுத்தி, இருமையில் இடையில் நின்றும் உயர்ந்தும் காணப்பெறும் ஒருமை. இதுவே செம்மைஒளி செம்மை. இதுவே இருமைக்கும் மூலகாரணமாய் நின்ற ஒருமை. இலிங்கப்பேரொளி. கடந்தும் கலந்தும் நின்ற பேரொளிநிலை.

2. இருமை இல் ஒருமை - இருமைகெட்ட ஒருமை இருமையைக் கடந்த ஒருமை. இருமையை நீத்த ஒருமை.

மெய்மை பொய்மை என்ற இருமையை நீத்த ஒருமையாம் உண்மை.

3. இருமையுள் ஒருமையைத் தன்னுள் அடக்கி எழுந்த ஒருமை. இதுவே நன்மை என்று பேசப்பெறுவது.

இனி, 'திரு' என்பது இம்மூன்றாலும் விளக்கப்பெற்றாலும் இம்மூன்றும் இணைய நின்ற ஒன்றே 'திரு' எனப்பெறும்.

செம்மையும் உண்மையும் நன்மையும் ஆகிய மூன்றும் இணைய நின்ற ஒன்றே 'திரு' எனப்பெறும் நிலையுடையது எனக் கொள்ள வேண்டும்.

| | |
|---|---|
| இருப்பினால் | செம்மையாய் |
| பண்பினால் | உண்மையாய் |
| செயலால் | நன்மையாய் |

என நின்ற மூன்றாலும் இணைந்த ஒன்றே 'திரு'.

## அனுபவ உரை இரண்டு

'திரு' என்பது மும்மை தழுவிய முதல் என்பதை அனுபவ வாயிலாகக் கண்டுணர்ந்து கூறிய இருஉரைகளைக் கண்டு தெளிவதும் கடமையாகும்.

1. அப்பரடிகள் திருவையாற்றுக்காட்சியில் இதனை நேர்நின்று அனுபவித்த நிலையில் அமைந்த விளைவைக் காட்டுகின்றார்.

"மாதர்ப் பிறைக் கண்ணியானை மலையான் மகளொடும்
 பாடிப்
போதொடு நீர்சுமந்தேத்திப் புகுவாரவர்பின் புகுவேன்
யாதும் சுவடுபடாமல் ஐயாறு அடைகின்ற போது
காதன் மடப்பிடியோடும் களிறு வருவன கண்டேன்
 கண்டேன் அவர் திருப்பாதம்
 கண்டறியாதன கண்டேன்" இதனையே

திருவையாற்றிற் கண்ட திருக்கயிலாயக்காட்சி என்பர். இப்பதிகம் காலத்தையும் இடத்தையும் கடந்த அனுபவநிலையில் (Time &space) நின்று பாடிய பதிகம்.

இப்பதிகத்தினுள் வரும் எல்லாப் பாடல்களிலும் முதலில் இருமைக்காட்சியானது இணைந்த நிலையில் பேசப்படுகிறது. காதல் மடப்பிடியோடும் களிறு வருவன கண்டேன் என்றாற்போல.

அடுத்து, 'இருமையில் நின்ற ஒருமைக்காட்சி' அமைகிறது. கண்டேன் அவர் திருப்பாதம். களிறும் பிடியும் இணைந்துநிற்க, அவற்றை இணைத்தும் உயர்ந்ததாயும் அமைந்த திருப்பாதம் (ஒற்றை) காட்சிப்படுகிறது.

மூன்றாம் நிலையில் இவைகளையெல்லாம் கடந்த ஒருமையானது காட்சிப்படுகிறது. அதனைக்

"கண்டு அறியாதன கண்டேன்"

என்று தெளிவுபட எடுத்துக் கூறியுள்ளார் அப்பரடிகள்.

2. இரண்டாவதாக மாணிக்கவாசகப்பெருமானின் அனுபவ உரை ஒன்றையும் காணுதல் வேண்டும்.

"என்னையும் இருப்பதாக்கினன்"

என்ற தொடர் கீர்த்தித் திருவகவலில் வருகிறது. காலத்தையும் இடத்தையும் வென்று நின்று இருந்த அனுபவத்தையே மாணிக்கவாசகர் இங்கே பேசுகின்றார். 'இருத்தல்' என்ற அனுபவத்தை உயர்மொழி என்றும் திருமொழி என்றும் வள்ளலார் மிக விரிவாக்கிப் பேசுவதை ஆளுடைய அடிகள் அருள்மாலையிற் காணலாம்.

## திருமுறைப் பெருமை

அருமறைநெறியையும் பிரமாபுரப் பெருநெறியையும் இணைத்து ஒருமைப்படுத்திய நிலையில் ஒருநெறி உண்டாகிறது.

ஒருநெறியானது முன்னே கூறப்பெற்ற இருமை நெறிகளையும் இணைத்து உயர்ந்த ஒருமைநெறி என்று முறைமைப்படுத்தப் பெறுகிறது.

ஒருமை நெறியானது செம்மையாய், உண்மையாய், நன்மையாய் விரிந்தும் இணைந்தும் நின்று முறைமையுற்றதால் திருநெறி என்றும் திருமுறைநெறி என்றும் பெயரிடப்பெறுவதாயிற்று.

திருமுறைநெறியில் நின்று அனுபவித்தும் பிறரை அனுபவிக்கவைத்தும் நின்ற பதிகங்களே திருமுறைத்தமிழ் எனவும் திருநெறியதமிழ் எனவும் போற்றப்பெற்றன. இதனையே 'பதிகப்பெருவழி' என்று பாராட்டுவார் நம்பியாண்டார் நம்பிகள்.

2. இரண்டாவதாக மாணிக்கவாசகப்பெருமானின் அனுபவ உரை ஒன்றையும் காணுதல் வேண்டும்.

"என்னையும் இருப்பதாக்கினன்"

என்ற தொடர் கீர்த்தித் திருவகவலில் வருகிறது. காலத்தையும் இடத்தையும் வென்று நின்று இருந்த அனுபவத்தையே மாணிக்கவாசகர் இங்கே பேசுகின்றார். 'இருத்தல்' என்ற அனுபவத்தை உயர்மொழி என்றும் திரு மொழி என்றும் வள்ளலார் மிக விரிவாக்கிப் பேசுவதை ஆளுடைய அடிகள் அருள்மாலையிற் காணலாம்.

## திருமுறைப் பெருமை

அருமறைநெறியையும் பிரமாபுரப் பெருநெறியையும் இணைத்து ஒருமைப்படுத்திய நிலையில் ஒருநெறி உண்டாகிறது.

ஒருநெறியானது முன்னே கூறப்பெற்ற இருமை நெறிகளையும் இணைத்து உயர்ந்த ஒருமைநெறி என்று முறைமைப்படுத்தப் பெறுகிறது.

ஒருமை நெறியானது செம்மையாய், உண்மையாய், நன்மையாய் விரிந்தும் இணைந்தும் நின்று முறைமையுற்றதால் திருநெறி என்றும் திருமுறைநெறி என்றும் பெயரிடப்பெறுவதாயிற்று.

திருமுறைநெறியில் நின்று அனுபவித்தும் பிறரை அனுபவிக்கவைத்தும் நின்ற பதிகங்களே திருமுறைத்தமிழ் எனவும் திருநெறியதமிழ் எனவும் போற்றப்பெற்றன. இதனையே 'பதிகப்பெருவழி' என்று பாராட்டுவார் நம்பியாண்டார் நம்பிகள்.

மேலும் அவரே,

"ஆறதேறும் சடையான் அருள்மேவ
வீறதேறும் தமிழால் வழிகண்டவன்"

என்றும் பாராட்டுவார்.

இனி, திருமுறைப் பெருமையாகச் சிலவற்றைக் காணுதல் வேண்டும்.

## திருமுறைப்பெருமை இரண்டு

1. திருமுறை பாடப்பெற்ற காலத்தில் பாடிய அருளாளர் என்ன அருளனுபவம் பெற்றாரோ அதனை இப்போதும் நாம் படித்து அத்தகைய அனுபவத்தைப் பெறுதல்.

2. அருளற்புதங்களை நிகழ்த்திக்காட்டிய பெருமை யுடையது. அத்தகைய பதிகங்களை நாமும் படித்துப் பாராயணம் செய்து அத்தகைய பயன்களை இப்போதும் பெறலாம். இக்காலத்தே அவ்வாறு பெற்ற வரலாறுகள் உண்டு.

எடுத்துக்காட்டாக ஒன்றிரண்டை நோக்கலாம்.

1. சந்தானாசாரியார்களில் முதலில் நின்ற மெய் கண்டார் இவ்வுலகில் பிறந்தமைக்குக் காரணம்

திருமுறைப் பெருமையே.

சகலாகமபண்டிதரைக் குருவாகக்கொண்ட அச்சுதக் களப்பாளருக்கு மகப்பேறு இல்லை. தேவாரத்தில் கயிறு சார்த்திப் பார்த்தபோது

"பேயடையாப் பிரிவெய்தும் பிள்ளையினோடு உள்ளம்
நினைவு
ஆயினவே வரம்தருவர் ஐயுற வேண்டா ஒன்றும்
வேயனதோள் உமை பங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர்தம் மைத் தோயாவாம்
தீவினையே"

என்ற பாடல் வந்தது. அதன்படி அச்சுதக்களப்பாளர் திருவெண்காட்டில் விரதமிருக்க, பிறந்த குழந்தையே மெய்கண்டாராகிறார்.

திருஞானசம்பந்தரும் சுந்தரரும் இயற்றிய இரண்டு அற்புதங்கள் உலகையே ஆனந்தத்தில் ஆழ்த்தின.

1. திருஞானசம்பந்தர் எலும்பைப் பெண்ணாக்கிய போது, அதில் எழுந்த திருவுருவானது அருளே. எலும்பைப் பெண்ணாக்கியது மட்டுமன்று; 'அருளையே' கண்ணாற் காண முடியும் என்ற அற்புதத்தை நிகழ்த்தியவர் திருஞானசம்பந்தர்.

2. சுந்தரர் பெருமாள் அவிநாசியில் முதலையுண்ட பாலனை அழைத்தது செயற்கருஞ்செயல் என்று துறைமங்கலம் சிவப்பிரகாச அடிகள் பாராட்டியுள்ளார்.

"போதமுண்ட பிள்ளை என்பு
பொருகண் மாது செய்ததோ
காதல் கொண்டு சொல்லின் மன்னர்
கல்மிதப்ப உய்த்ததோ
வாய்திறந்து முதலை கக்க
மகனை நீர ழைத்ததோ

யாது நம்பி அரிது நன்று
எனக்கியம்ப வேண்டுமே"

என்பது நால்வர் நான்மணிமாலைச் செய்யுள்.

திருமுறைப் பெருமையை விரிவாக விளக்குவதற்குக் காலமும் இடமும் போதா. ஆயினும் திருமுறைப் பெருமையை விளக்கும் அரிய இடம் ஒன்றை நினைத்துக் காணுதல்தான் இத்தலைப்பின் உட்பொருள்.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் தனித்தும் இணைந்தும் பல்வேறு அற்புதங்களைச் செய்தமைக்கிறார்கள்.

அற்புதச் செயல்களையெல்லாம் எவ்வாறு விளங்கிக் கொள்ளவேண்டும் என்பதற்கு ஒரு கட்டளைக்கல் தருகிறார் சேக்கிழார். "இப்படி ஒருசெயல் இதுவரை எங்கே நடந்துள்ளது? நடந்ததாகக் கேள்விப்படாமையால் இஃது ஒப்பற்றது-அற்புதம்" என்று இத்தகைய நிகழ்ச்சிகளைக் கண்டவர் காணாதவர் ஆய பொதுமக்கள் கருதுகிறார்கள் என்று அமைத்துக் கொள்ள வேண்டும்" என்பது சேக்கிழார் அமைத்தமுறை.

திருமறைக்காட்டில் திருக்கதவம் திறக்கப்பெற்றது. இந்நிகழ்ச்சி நடைபெற்றபின் சேக்கிழார் ஒரு விளக்கத்தை அமைக்க முற்படுகிறார்.

இச்செயல் நடைபெறுதல் இயலுமா? ஆனால் நடைபெற்றிருக்கிறது. எவ்வாறு நடைபெறுதல் இயலும் என்பதே அந்த வினா.

இறந்தாரை எழுப்புதல், எரியில் விழுந்த ஏடு பச்சையாதல், ஏடு எதிரேறுதல், மறைக்கதவம் திறத்தல் என்பனவெல்லாம் நடைபெறுதல் இயலுமா? இயற்கை நிகழ்வில் நடைபெறுதல் இல்லை. ஆனால் நடைமுறைப் படுத்தப் பெற்றிருக்கிறது என்பதே கண்கூடு.

எத்தகைய காரண காரிய அடிப்படையில் இச்செயல் களையெல்லாம் திருமுறைவாளர்கள் செய்தளிக்கிறார்கள்

என்பதே அவ்வினா? நாமும் விடைகண்டு கொள்ள வேண்டிய வினா.

திருமறை நம்பராகிய இறைவன் முதன்முதலாக அருள்காரணமாக எடுத்துச் சொன்னவைகளை அவனோடு ஒருமையில் நின்று அதனையே எடுத்துச் சொல்லும் கொள்கையில் ஒன்றாகவே நின்றவர்கள் மெய்த் தொண்டர்கள். அவர் மொழியை வழிமொழியாகக் கொண்டு அவைகளை அப்படியே எடுத்துரைப்பதில் எந்த வகையான மாற்றமும் இல்லை.

ஆனால், தம்பிரானொடு ஒத்துவரும் அருட் செய்கைகளை யெல்லாம் தாமே வகுத்தெடுத்து அமைத்து விடுகிறார்கள். அருட்சொல்லை அப்படியே சொல்லுகிறவர்கள் அருட் செயலை மட்டும் தாமே வகுத்திடும் வல்லமை பெற்றிருக்கிறார்கள்.

அவ்வகையில் மறைநெறியுடன் திருமுறைநெறி வேறுபடு கிறது. திருமறை நம்பர்க்கும் அருளாளர்களாகிய மெய்த் தொண்டர்க்கும் அருள்வழக்கம் எனப்பெறும் செயற்பாட்டு நிலையில் மிக்க வேறுபாடு இருக்கிறது.

சொல்வதில் இறைவனை விஞ்சாமலும் செயலாற்றுவதில் தாமே விஞ்சிச் செயல்பட்டும் வருகிறார்கள் என்பதை நாம் அறிய முடிகிறது என்று அருளுகின்றார் சேக்கிழார்.

"திருமறைநம்பர் தாம் முன்புஅருள் செய்த
அதனைச் செப்பும்
ஒருமையில் நின்ற தொண்டர் தம்பிரா
னார்பால் ஒக்க
வரும் அருட்செய்கை தாமே வகுத்திட
வல்லர் என்றால்
பெருமறையுடன் மெய்த்தொண்டர்க்கு இடையீடு
பெரிதாம் அன்றே"

– பெரியபுராணம், திருஞானசம்பந்தர்புராணம் 592.

எனவே சொல்லால் திருமறைப்பெருமையும் திருமுறைப்

பெருமையும் இருமையில் இணைந்த ஒருமையாகிறது. திருவருள் வழக்கம் என்னும் செயலால் திருமறைப் பெருமையை விட, திருமுறைப்பெருமை விஞ்சியே நிற்கின்றது என்ற கருத்தைச் சேக்கிழார் தம் திருவாக்கால் அறிகிறோம்.

## முடிவுரை

மேலே குறிப்பிடப் பெற்றவற்றால் 'திரு' என்பதன் பொருளும் திருமுறை என்பதன் பொருளும் திருமுறைப் பெருமையும் ஆய்வியல் நோக்கில் உணர்த்தப் பெற்றன.

# 2. நட்பியல் திருமுறை

## முன்னுரை

நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே
நிறைந்து நிறைந்து ஊற்றெழுங்
கண்ணீர் அதனால் உடம்பு
நனைந்து நனைந்து அருளமுதே
நன்னிதியே ஞான
நடத்தரசே என்னுரிமை
நாட்கனே என்று
வனைந்து வனைந்து ஏத்துதும் நாம்
வம்மின் உலகியலீர்.

என்று உலகவரை யெல்லாம் - உலகியலில்தோய்ந்து அருளியலைத் தேராது நிற்கும் உள்ளத்தவர்களை யெல்லாம் கரைந்து கரைந்து கூவிக் கடைத்தேற்ற முற்பட்ட அருளாளராகிய இராமலிங்க அடிகள் தாம் பாடிய ஆளுடைய நம்பிகள் அருள்மாலையில் உள்ள பத்துப் பாட்டுக்களில் ஒன்பது பாட்டுக்களின் முடிவில் பெருந்தகையே என்ற சொல்லை வைத்துப் பாராட்டியிருக்கின்றார்.

'வன்தொண்டப் பெருந்தகை' என மூன்று பாடல்களிலும் 'நாவலூர்ப்பெருந்தகை' என ஒரு பாடலிலும், அருள் தலைமைப் பெருந்தகை, உயர்க்கருணைப் பெருந்தகை தனிக்கருணைப் பெருந்தகை, தனித்தலைமைப் பெருந்தகை என்றும் அடை மொழியிட்டுக் கூறும் இராமலிங்க அடிகள் ஆருட்பாட்டுப் பெருந்தகை என்றும் அமைத்துக் கூறியிருப்பது நினைந்து ஆய்ந்து இன்புறத்தக்கது.

மூவர் தமிழினுள் திருஞானசம்பந்தர் பாடல்களைத் திருக்கடைக்காப்பு என்றும் திருநாவுக்கரசர் பாடல்களைத் தேவாரம் என்றும் நம்பியாரூரர் பாடல்களைத் திருப்பாட்டு என்றும் கூறும் மரபு உண்டு.

இராமலிங்க அடிகள் 'திருப்பாட்டு' என்றும் 'அருட்பாட்டு' என்றும் அமையும் இரண்டு தொடர்களாலும் பாராட்டிக் கூறியருளியதை ஆழ்ந்து சிந்தித்தல் வேண்டும்.

தேன்வடிக்கும் அமுதாம் உன்திருப்பாட்டைத்
தினந்தோறும்
நான்படிக்கும் போது என்னை நானறியேன்
நா ஒன்றோ
ஊன்படிக்கும் உளம்படிக்கும் உயிர்படிக்கும்
உயிர்க்கு உயிரும்
தான்படிக்கும் அனுபவங்காண் தனிக்கருணைப்
பெருந்தகையே.

என வரும் ஆளுடையநம்பிகள் அருள்மாலையின் ஏழாம் திருப்பாடலில் 'உயிர்க்கு உயிரும் தான்படிக்கும்' என்று குறிப்பிட்டது இறைவனையே.

திருவாசகத்தை மனப்பாடம் செய்வதற்கு எழுதி எழுதிப் படித்தான் இறைவன் என்று கூறுவது போல நம்பியாரூரரின் திருப்பாட்டைப் படிக்கும் முறையையும் அனுபவிக்கும் முறையையும் தெரிந்து கொள்ளுவதற்காகத் தினந்தோறும் வள்ளலாருடன் இணைந்து படித்துப் பழகிக்கொண்டான் என்று அறிந்து இன்புற வேண்டும்.

திருவென நின்ற பரம்பொருளும் படித்துணர்ந்த பாட்டு ஆதலின் திருப்பாட்டு என்ற சிறப்புப் பெயரைப் பெற்றது போலும்.

திருமுறையையும் திருநெறியதமிழையும் மரபுவழியிலும் கொள்கை அடிப்படையிலும் விளங்கிக்கொண்ட வகையில் திருமுறைகளில் ஏழாந் திருமுறை என நின்ற நம்பியாரூரரின்

திருப்பாட்டினை நட்பியல் திருமுறை என்ற கொள்கை அடிப்படையில் விளங்கிக் கொள்வதே இப்பகுதியின் உட்கோள்.



### பொற்காலம்

நம்பியாரூரர் இந்நிலவுலகில் வாழ்ந்தகாலம் சைவ சமயத்தின் பொற்காலம் என்று போற்றப்பெறும் பெருமை யுடைய காலம்.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் இணைந்து நின்றும் மங்கையர்க்கரசியாரும் திலகவதியாரும் அனைத்துயிர்க்கும் அருள்தாங்கி நின்றும் தொண்டாற்றிய நிலையில் பிற சமயத்தாக்கம் ஒழிந்து சைவசமயம் இயக்கவடிவெடுத்து, திருத்தொண்டில் முழு மூச்சாக நின்று வளம் பெற்ற காலம் சுந்தரர் காலம்.

சைவசமயத்திலிருந்து வேற்றுச்சமயம் சார்ந்தபோது திருநாவுக்கரசரெனும் மருள்நீக்கியாரை ஏன் என்று கேட்பதற்குச் சைவசமயத்தில் வளமையில்லாதிருந்த நிலையும் பிற சமயம் சார்ந்த தன் கணவனாம் கூன்பாண்டியனைத் தவறு என்று தட்டிக்கேட்க வாயிருந்தும் அரசன் என்ற காரணத்தால் கேளாது வருந்தியிருந்த நிலையும் மாற்றம் பெற்று, சைவசமயமானது புதுமைப் பொலிவுடனும் கொள்கைப் பிடிப்புடனும் தொண்டின் வளத்துடனும் சிறப்புற்றோங்கியிருந்த காலத்தில் சுந்தரர்தம் வாழ்வு அமைகிறது.

சைவசமயத்தில் எது நடந்தாலும் தட்டிக் கேட்பதற்கும் தவற்றைத் தவறு எனக்கூறி அதட்டித் திருத்தவும் ஓர் உன்னத அமைப்பு 'புனிதர் பேரவை' என்ற அமைப்பில் உருவாகிவிட்ட பிறகு வந்து அவதாரம் செய்கிறார் திருநாவலூரரர்.

"மதிவளர் சடைமுடி மன்றுளாரை முன்
துதிசெயும் நாயன்மார் தூயசொன் மலர்
பொதிநலன் நுகர்தரு புனிதர் பேரவை
விதிமுறை உலகினில் விளங்கி வெல்கவே"

என்பது சேக்கிழார் திருவாக்கு.

திருவாரூர்த் தேவாசிரிய மண்டபத்து அடியவர் கூட்டத்துக்கு அடியேன் என வணக்கங்கூறிய பெருமை நம்பியாரூரருக்கு உண்டு என்றால் அதன்பெருமையை எடுத்துக்கூறி வாழ்த்திய பெருமை சேக்கிழாருக்கு உண்டு.

அடியவர் திருக்கூட்டத்தைச் சைவப் பெருநெறிக்குத் தலைமையாக்கி, சைவப்பெருநெறியை ஒரு கட்டுக் கோப்பான முறையில் அமைத்து, உயிரோட்டத்துடன் வாழவைக்கும் உரிமையுடைய இயக்கவழித் தொண்டுநிலையமாக அப் புனிதர் பேரவையை அமைத்து வரலாற்றுப் பெருமை அளித்து வாழவைத்த நிலையைத் திருவருளால் உணர முடிகிறது.

சேக்கிழார் இங்கே ஒரு புரட்சிகரமான கருத்தை எடுத்துக்கூறி விளக்குகின்றார்.

சிவபரம்பொருளால் ஆகமங்களாலும் அருளுரை களாலும் வகுத்தும் வழிகாட்டியும் வாழ்ந்துகாட்டியும் அமைக்கப்பெற்ற சைவ விதிமுறைகள் அல்லது சிவ விதிமுறைகள் சிறப்புறுக என்று கூறாமல்,

'புனிதர் பேரவை விதிமுறை உலகினில்
விளங்கி வெல்கவே'

என்று கூறி ஒரு வரலாற்றுத் திருப்புமுனையை அமைத்துக் காட்டினார்.

தனியடியார் திருக்கூட்டமாக இருப்பினும் புனிதர் பேரவை இயக்க உருப்பெற்ற நிலையம் என்ற மரபை எடுத்துக்காட்டி, தவறு இறைவன்பால் நிகழ்ந்தாலும் தட்டிக் கேட்கும் உரிமையுடைய நிறுவனமாகப் புனிதர்பேரவை விளங்கிய காலத்தில் வந்து அவதாரம் செய்கிறார் நம்பியாரூரர்.

புனிதர் பேரவையின் அருளார்ந்த செயல்முறையைப் பாராட்டுதற்கென்றே திருக்கயிலையிலிருந்து அனுப்பப் பெறுகிறார் சுந்தரர்.

சைவப் பெருநெறியில் வாழ்பவர்க்குரிய வாழ்வியற் சிக்கல்களை ஆராயவும் வாழ்வியல் முறைகளை அமைத்துத் தரவும் அரசோ திருமடமோ என்றுள்ள இன்னோரன்ன வற்றில் சாராத தனித்தன்மையுடைய செயல் நிறுவனம் ஒன்று சைவத்துக்கு, சைவநெறிபேணும் மக்களுக்கு உண்டு என்று பெருமைப்படக் கூடியவகையில் அமைந்த புனிதர் பேரவையானது உயிரோட்டத்துடன் செயல்பட்டுக் கொண்டிருந்த காலத்தில் நம்பியாரூரர் இந்நிலவுலகு வாழ்வுக்கு வருகை தருகிறார்.

"மீளா அடிமை உமக்கே ஆனேன்" என்றும் "உமக்கு ஆள் அல்லேன் எனலாமே" என்றும் இறைவனுக்கே வழிவழி யடிமை என்பதாக உறுதிசெய்து கொண்ட சுந்தரர் "திருத்தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியம் எய்துமோ" என்றும் "உமக்கு ஆளாக இருக்கும் என்னை இவர்க்கு ஆளாக்கு" என்றும் இறைவனையே கேட்டுப் பெறும் அளவுக்கு ஒரு புதிய திருப்புமுனை தோன்றுவதற்குரிய களமும் காலமும் சூழலும் அமைந்த நன்னிலைப் பின்னணியில் திருநாவலூரரின் அவதாரம் நடைபெறுகிறது.

ஒருவர் தம்முடைய பொன்னையும் பொருளையும் வாழ்வியற் பேறுகளான மக்களையும் கூட, இறைவனுக்கு என எழுதிவைக்காமல் இறைவனடியவருக்கென 'ஓம்' அறைந்து வைத்தல் என்ற வழக்கானது திருஞானசம்பந்தப் பெருமான் காலத்தே தொடங்கியது.

இறைவன் பெயரை வைப்பதைவிட, இறைவன் அடியவர் பெயரை வைக்க வேண்டும் என்ற ஆர்வம் பிறந்ததும் செயல்முறைப் படுத்தப்பெற்றதும் திருநாவுக் கரசரை உள்ளிட்டு நடைபெற்றன.

இவைகளெல்லாம் முதிர்ச்சி பெற்று, அடியவர்களுக்கென அனைத்தையும் வழங்கவேண்டும் என்ற கொள்கை சிறந்திருந்த காலத்தில் சுந்தரரின் வாழ்வியற் காலம் தொடங்குகின்றது.

## வரலாற்றுச் சிக்கல்

திருவருள் வளமை பெற்ற சூழலில் காலப் பின்னணியில் சுந்தரர் வருகை நிகழ்ந்தாலும் சுவையான எடுத்துப் பேசுவதற்கு இனிமையான வாழ்வியல் வரலாற்றுத் திருப்புமுனைகள் இருந்தாலும் சுந்தரர் வாழ்க்கையானது சிக்கல் நிறைந்த வரலாறாகவே அமைந்துவிடுகிறது.

மெய்ப்பொருளியலான, சமய இயலான, சமுதாய இயலான, அற இயலான வினாக்கள் பலவற்றையும் எழுப்புவதற்கு இடமளிப்பதாக இருந்த சுந்தரர் வரலாறு விடைகளைச் சந்திக்க இயலாமலேயே நிறைவு பெற்று விடுகிறது.

சுந்தரர் வரலாற்றை ஆய்ந்து எழுதப் புக்க அறிஞர்களிற் பலர் சிக்கல்களினால் தாக்குண்டு, பலநிகழ்வுகள் கற்பனை, பொருந்தாக்கூற்று என்று எழுதி தம்முள் மலைந்து சிதறுண்டு போவாராயினர். இதனை உணர்ந்த வேறுசிலர் சிற்சில வரலாற்று நிகழ்வுகளை மட்டும் எடுத்தெழுதி விளக்கிவிட்டுப் போவாராயினர்.

சுந்தரரின் கயிலை வாழ்வும் நிலவுலக வாழ்வும் அமைந்தமுறை, நிலவுலகப் பெயரிலேயே வழங்கப் பெறாமல் திருக்கயிலை வாழ்வுடன் இணைந்த முன்னைப் பெயரிலேயே வழங்குதல் என்பது சுந்தரர் வரலாற்றில் எழுந்த சிக்கல்.

திருநாவலூரிற் பிறந்த அவருக்கு "நம்பி ஆரூரர்" என்பது பிள்ளைத் திருநாமம். 'நம்பி' என்பது இல்லாமலேயே 'ஆரூரன்' என்றே அழைக்கப் பெறுகிறார். அவரே தம்முடைய பெயரைச் சுருக்கி, முதல் எழுத்துக்களை நீக்கி, 'ஊரன்' என்று அமைத்துக் கொள்ளுகின்றார்.

அந்தணர் குலத்துள் தோன்றிய அவர் அரசகுடும்பத்துக்கு மகன்மை போகிறார். வேதாகமக் கல்வியும் சிவபூசனையும் செய்வதைவிட, குதிரையேற்றம், யானையேற்றம் பயின்று அரசுத்திருவும் அந்தணத்திருவும் பொங்க வாழ்கிறார்.

சடங்கவி சிவாசாரியார் மகள் திருமணத்துக்குச் செல்பவர் குதிரையேறிச் செல்கிறார். ஒருமணம் தடையாயினபின் திருமணம் செய்துகொள்கிறார்.

திருக்கயிலையிலிருந்து நிலவுலகம் வருவதற்கு இரண்டு காரணங்கள் பேசப்பெறுகின்றன. திருத்தொண்டத்தொகை அருளுவது ஒரு காரணம். சிவத்தொண்டில் ஈடுபட்டிருந்த ஞான்று மனந்திரித்த காரிகைகளை இவ்வுலகில் மணந்து இன்பநிறைவு எய்துவது மற்றொரு காரணம்.

இப்படிப் பல்வேறு வகையான சிக்கல்கள் இருப்பினும் திருவருளின் குறிப்புணர்ந்து அவர் தம் தொண்டினையும் அவர்தம் அருளிப்பாட்டின் திறத்தினையும் தொண்டின் அடிப்படையிலும் சமுதாயக் கொள்கையின் அடிப் படையிலும் கண்டு தெளிதல் பயனுடையதாகும்.

## இன்பியல் வரையறை

தமிழகப் பண்பாடும் நாகரிகமும் உலகளாவிய உயிரோட்டம் ஒன்றைப் பின்னிப் பிணைத்த நிலையிலேயே வெளிப்பட வருதலைக் கண்கூடாகக் காணலாம். வெளிப்பட நோக்க இயலாவிடினும் அடிப்படையில் அத்தகைய உயிரோட்டம் அமைந்திருத்தலைக் காண இயலும்.

"அந்நிலை மருங்கின் அறமுதலாகிய
மும்முதற் பொருட்டும் உரிய என்ப"

என்ற தொல்காப்பிய நூற்பா 1363-இல் குறிப்பிடப் பெற்றுள்ளவாறு அறம்பொருள் இன்பம் என்ற மூன்றன் அடிப்படையைக் கொண்டதாகவே அமையும்.

திருஞானசம்பந்தர் அறத்தை அடிப்படையாகக் கொண்டு ஆணை கூறி, வாதப்பொருளுரைகளை நிலைநிறுத்தி, மறைமொழிகிளந்த மலர்வாயால் நிறைமொழியை வெளிப்படுத்தி, மெய்ப்பொருளுண்மையை நிலைநாட்டினார்.

திருநாவுக்கரசர் வளர்திருத்தொண்டின் நெறிவாழ வருதவமுனிவராக நின்று பொருள் என்னும்

குறிக்கோளை அடிப்படையாகக் கொண்டு மெய்ப் பொருளியல்புகளை நிலைநாட்டினார் எனக் கொள்ள வேண்டும்.

. அவ்வகையில் சுந்தரர் பெருமான் **இன்பம்** என்னும் குறிக்கோளை அடிப்படையாகக்கொண்டு மெய்ப் பொருளியலை வரையறைப்படுத்தியும் இன்பியல் குறிக்கோள் அடிப்படையில் அடைய முயல்வாரை அதற்குரிய நெறியை எடுத்துக்காட்டி நெறிப்படுத்தியும் தொண்டு செய்தவர் என்ற அடிப்படையை உணர்ந்து தெளிதல் வேண்டும்.

## நான்கு வரலாற்று நிகழ்வுகள்

திருநாவலூரர், நம்பியாரூரர், வன்தொண்டர், தம்பிரான்தோழர் ஆகிய பெயர்களாற் சுட்டப்பெறும் சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் திருக்கயிலையில் வழங்கிய பெயர் "ஆலால சுந்தரர்" என்பது.

திருநீற்றுத்தொண்டும் திருமலர்த்தொண்டும் செய்த காரணத்தால் திருப்பாற்கடல் கடைந்தபோது எழுந்து பரவிய ஆலாலம் எனப்பெறும் இருவகை நஞ்சினைக் கண்டு தேவரனைவரும் அஞ்சியோட, தாமே முன்சென்று நின்று, அவற்றை ஒருங்கு திரட்டி, ஒருசிறு உருண்டையாக்கிக் கொண்டு வந்து பெருமானிடம் கொடுத்த காரணத்தால் ஆலால சுந்தரரானார். இதை நினைந்தே சேக்கிழார் பெருமான் **மேருவரையின் மேம்பட்ட தவத்தான்** என்று இறைவன் திருவாக்காலேயே புகழுமாறு செய்கிறார்.

ஞானப்பால் கொடுத்தாள்வம், சூலை மடுத்தாள்வம் என நின்று முறையே திருஞானசம்பந்தரையும் திருநாவுக் கரசரையும் ஆட்கொண்டமை போல, தடுத்தாள்வம் என்பது ஆலால சுந்தரருக்கு உரிமையாயிற்று. ஆயினும், ஏனைய இருவர் போலன்றி. தடுத்தாட்கொள்ள வேண்டும் என்று திருக்கயிலையில் அவரே கேட்டுக் கொண்டமைக் கிணங்கவே அத்தகைய அருளிப்பாடு நிகழ்கிறது.

நம்பியாரூரரின் வரலாற்றில் திருவருளூற்றம் பெற்றவையாகக் கீழ்க்கண்ட நான்கு வரலாறுகள் உண்டு.

1. தடுத்தாட்கொள்ளப்பெறல்
2. வன்தொண்டராதல்
3. தம்பிரான் தோழராதல்
4. அடியவர்க்கு அடியராதல்

என்பன. இந்நான்கு அருளிப்பாடுகளையும் இவைகளை அடிப்படையாகக் கொண்ட அருளுரைகளையும் நோக்கித் தெளிதல் வேண்டும்.

## தடுத்தாட் கொள்ளல்

திருக்கயிலையில் ஆலால சுந்தரராக இருந்தபோது மாதர்மேல் மனம்வைத்த காரணத்துக்காக நிலவுலகுக்கு அனுப்பப் பெறுகிறார். அப்போது அவர்

செய்ய சேவடி நீங்கும் சிறுமையேன்
மையல் மானுடமாய் மயங்கும் வழி
ஐயனே தடுத்தாண்டு அருள்செய்

–பெரியபுராணம், திருமலைச்சிறப்பு 28

என வேண்டுகின்றார்.

மையல் மானுடமாய் மயங்குதல்
பந்தமானுடப் பாற்படுதல்

என்னும் இருதொடர்கள் இந்நிகழ்விற் குறிக்கப் பெறுகின்றன. இவ்விரண்டுமே இப்பூவுலகில் அமைந்த குறைபாடுகள் எனக்கருதி அவற்றுள் விழாதவாறு தடுத்தாட் கொள்ளவேண்டும் என்று வேண்டுகின்றார்.

மக்கள் உருவில் நிற்கும் மக்களை மக்களாகப் பார்ப்பதில் தவறு என்ன? மையல் மானுடமாய் மயங்கும் வழி ஐயனே தடுத்தாள் என்று ஏன் கேட்கவேண்டும்?

மக்களுருவில் மூவகை வாழ்நிலைகள் உண்டு.

1. மக்கள் உருவில் மாக்கள் வாழ்தல்
2. மக்கள் உருவில் மக்கள் வாழ்தல்
3. மக்கள் உருவில் பரம்பொருள் வருதலும் வாழ்தலும்.

மெய்ப்பொருளியல் அடிப்படையிற் காணும்போது உடல், உயிர், பரம்பொருள் என்ற முக்கூட்டுத்தொகுதியே அனைத்து வாழ்வுப் பொருள்கள். ஓரறிவுயிர் முதல் ஆறறிவுயிர் வரை உள்ள அனைத்தும் அம்முக்கூட்டுத் தொகுதிதான். இவைகளைக் காணும்போது உடம்பாற் காணுங்கால் வேற்றுமை உணர்வு மிகும். உயிர் என்ற ஒருமையிற் காண முற்படின் உயிரொருமை உணர்வு பெருகும். பரம் பொருட்காட்சி அமையுமாயின் சிவமே தோன்றும் காட்சி அமையுமாயின் அதுவே ஆன்மநேய ஒருமைப்பாட்டுக்கு இயலுவதாக அமையும் இன்றியமையாக் காட்சியாகும்.

உடலளவில் மட்டும் காணும் காட்சி குறையுடையதா என்று வினாவில் குறையுடையதே. உடலை உடலாகக் காண்பது சரியேயாயினும் உடலினுள் இருக்கும் உறுபொருளைக் காணாமல் புறக்கணித்து விடுதல் தவறுதானே.

உடலையும் உயிரையும் இணைத்துக் கண்டாலும் இந்தக் குறை உண்டு.

உடம்பினை முன்னம் இழுக்கென்றிருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே".

என்ற திருமந்திரக் கூற்றின்படி, உடம்பினுள் வாழும் உறுபொருளைக் கண்டு தெளிந்து அதனுள் நின்று வாழுதலே முறை.

மக்களை மக்களால் பார்க்கும்போது வேறொரு சிக்கலும் ஏற்பட வழிஉண்டு. பரம்பொருள் நிலவுலகில் வந்து மக்களுடன் தொடர்பு கொள்ளும்போது மக்களுருவில்தான் வருகிறது. பூவுலக மக்கள் மக்களுருவில் வந்து நின்ற சிவபரம்

பொருளையும் மக்களாகவே கண்டு மயங்கிவிடுகிற மயக்கவுணர்வு உண்டாகிக் கேடுவிளைப்பதாகிறது.

இது சுந்தரருக்கு இந்நிலவுலகில் பலமுறை ஏற்படும் சிக்கலாக அமைந்துவிடுகிறது. அந்தணமுதியவனாக வந்து ஆண்டு கொண்ட பிறகும் தடுத்தாட்கொண்ட பிறகும் இத்தகைய் குறை நேர்ந்து விடுகிறது.

திருவதிகையை மிதித்தற்கஞ்சிச் சித்தவடமடத்தில் தங்குகின்றார். வீரட்டானத்திறைவரை மனத்தில் நினைத்த வராய், அம்மடத்துத் திண்ணையில் படுத்துறங்கினார். வீரட்டானேசுரர் கிழவேதியர் வடிவு கொண்டு யாருமறியாமல் அம்மடத்திலேயே வந்து படுக்கிறார். தம்முடைய காலை நீட்டி, நம்பியாரூரர் முடிமேல் படவைத்தார். நம்பியாரூரர் எழுந்து, உம்முடைய கால்களை என் முடிமேல் வைத்தனையே என்றார். திசைதெரியாவகை செய்தது என்னுடைய மூப்பு என்ற விடை வந்தது. வேறிடம் சென்றுபடுத்தார் சுந்தரர். சிறிது நேரத்தில் மீண்டும் கால் பட்டது. இப்படி மூன்று முறை நடந்தது என்பது மரபு. என்னைப் பலமுறை மிதிக்கும் நீ யார்? என்று கேட்டபோது முதியவர் மறைந்தார். திடுக்கிட்டுணர்ந்த நம்பியாரூரர்

"எம்மான் தன் அடிக்கொண்டு என்முடிமேல்
வைத்திடும் என்னும் ஆசையால் வாழ்கின்ற
அறிவிலா நாயேன்"

என்று குறிப்பிட்டு ஆராத்துயர் கொண்டு அழுவாராயினார்.

மறுப்பவும் மறுப்பவும் சுந்தரன் திருமேல் வைத்த உன் திருவடியை, பண்ணேறு மொழியடியார் பரவியேத்தும் பாதமலர் அடியிணையை இப்பாவி பார்க்கில் கண்ணேறு படுமென்றோ, "கனவிலேனும் காட்டென்றால் காட்டுகிலாய் கருணையீதோ" என்று கரைந்து கரைந்து உருகுகின்றார் இராமலிங்க அடிகள்.

திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் அந்நிலை 'கருதியே உயிர்களில் உள்ள சிவம் வெளிப்பட நிற்குமாறு

காட்சி அமைய வேண்டும் என்ற தொண்டையே பேணி நின்றார்கள். அதன் அடிப்படையில் சுந்தரரும் தொண்டு செய்ய விழைகிறார்.

எப்பொருளையும் அப்பொருள்களில் நின்றுறையும் மூலமாகிய முதற்பரம்பொருளாகவே யான்கண்டு வணங்கித் தொண்டாற்றும் வகையில் என் காட்சி அமைய வேண்டும் என்றார். தலைமை பற்றிக் காணும் காட்சி அமைய வேண்டுமேயன்றிப் பன்மை பற்றிய காட்சி அமையக்கூடாது என்பதே அவர் கேட்ட வரத்தின் அடிப்படை.

அனைத்துப் பொருள்களும் சிவமேயாகக் காணும் காட்சி அமையவேண்டும் என்றார். சிவமே மனிதவடிவில் வந்தாலும் இத்தகைய காட்சியால் உண்மை தெளியலாம், குறை நேராது என்றும் கருதுகிறார்.

இத்தகைய வரம் தமக்கு மட்டுமேயன்றி, அனைத்துயிருக்கும் அமையும் பேறாக வரமாக அமைகிறது.

எனவே, தடுத்து ஆட்கொள்ளுதல் என்பது உலகியற்கையின் வண்ணம் மக்கள் முதலியவாக யான் பார்க்க முற்படும் போது சிவமாகக் காணும் காட்சியை எனக்குக் கொடுத்து இயல்பாகச் செல்லும் பார்வையைத் தடுத்து, நின் அடிமையாக்கி, என்னைக் காத்தல் வேண்டும் என்று வேண்டுகின்றார். இதனாலேயே பறவை நாச்சியாரைக் கண்டபோது,

"சிவனருளோ"

என்றும், சங்கிலி நாச்சியாரைக் கண்டு மயங்கியபோது

தண்ணார் அருளால் வரும்பேறு

என்றும் காணும் காட்சியே அமைகிறது என்று எடுத்துக் காட்டினார் சேக்கிழாரடிகள்.

இத்தகைய காட்சியின் அடிப்படையில் ஒருவகைத் தோத்திரம் எழுகிறது

புன்னெறி அதனிற் செல்லும்
போக்கினை விலக்கி மேலாம்
நன்னெறி ஒழுகச் செய்து
சுவையறு காட்சி நல்கி
என்னையும் அடியன் ஆக்கி
இருவினை நீக்கி ஆண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல்
பாத பங்கயங்கள் போற்றி

என்பதே அது.

தடுத்தல் ஆட்கொள்ளல் என்ற இருவகைப் பெரும் பேறுகளை ஒருவரமாகக் கேட்டுப் பெற்றமையால் "நயத்துக்குச் சுந்தரனார்" என்ற நல்ல பெயரையும் பெற்றார்.

தடுத்தாட் கொள்ளவேண்டும் என்பதை வரமாகக் கேட்டுப் பெற்றார். அதனால், இறைவன் தடுத்தாட்கொண்டான். இது கயிலையிற் கேட்டதை நிலவுலகில் செயற்படுத்திக் காட்டியது.

என்னைப் பலரறியத் தடுத்தாட்கொண்டது உண்மை யானால் இதனையும் செய்ய வேண்டும் என்று அதையே அடிப்படையாக வைத்துப் பல்வேறு பேறுகளைப் பெறுகிறார். இதுவும் சுந்தரர் அமைக்கும் ஓர் நயம்.

'தடுத்து ஆட்கொள்வதை' நிகழ்ச்சிகளாக நிரலே அடுக்கி அமைத்துக் காட்டுவது ஒருவகை. ஆனால் தடுத்து ஆட்கொள்ளும் நிலையையே அருளனுபவமாகப் பெறும் பேறும் சுந்தரருக்கு வாய்க்கிறது.

திருநாவலூரார் தில்லைத்தரிசனம் செய்கிறார். முதன் முறைத் தரிசனத்தில் அமையும் அனுபவத்தை;

"ஐந்துபேர் அறிவும் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
இந்தையே யாகக் குணம் ஒருமூன்றும்
திருந்து சாத்துவிகமேயாக

இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபேர் இன்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்"

என்று சேக்கிழார் (பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட புராணம்106) வெளிப்படுத்துகின்றார். இந்தப் பாட்டினையும் இக்கட்டுரையின் முதலிற் குறிப்பிட்ட "நினைந்து நினைந்து" எனத் தொடங்கும் இராமலிங்க அடிகள் பாட்டினையும் இணைத்து நோக்க வேண்டும்.

தில்லைத் தரிசனத்தை இரண்டாம் முறையாகத் தரிசிக்கும்போது சுந்தரர் தில்லைக் காட்சியில் பேரூர்ப் பேரம்பலத்துப் பெரியான் 'ஆடும் காட்சியை அனுப விக்கின்றார். இடம் சிற்றம்பலம்; காட்சி அனுபவம் பேரூர்ப் பேரம்பலம். இங்கே "மடித்தாடும் அடிமைக்கண்" என்ற தொடக்கமுடைய பதிகம் அருளுகின்றார். சிற்றம்பலக் காட்சியில் பேரம்பல அனுபவம். இப்பதிகம் முழுவதிலும் 'தடுத்தாட்கொள்வான்' என்பதனால் விளைந்த அருளனுபவம் பேசப் பெறுகிறது. இதன் இறுதிப்பாடல்,

பாரூரும் அரவல்குல் உமை நங்கை அவள்பங்கன்
பைங்கண் ஏற்றன்
ஊரூரன் தருமனார் தமர் செக்கிலிடும்போது
தடுத்தாட்கொள்வான்
ஆரூரன் நம்பிரான ஆரூரன் மீகொள்கில்
அணி காஞ்சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் பெரியானைப் புலியூர்ச்சிற்
பலத்தே பெற்றாமன்றே" (7.90.10)

திருநாவலூரரா ழ்ய வரலாற்றிலும வாழ்வியலிலும் அருளனுபவத்திலும் அடித்தளமாகவே அமைந்து விட்' வரம், அதுவே உலகத்துயிர்களுக்கும் வாழ்வியல் வரமாக அமைந்து விடுகிறது.

## வன்தொண்டன் என்பதோர் வாழ்வு

திருநாவலூராளியாகிய ஆலாலசுந்தரர் திரு வெண்ணெய் நல்லூர்ப் பித்தனுக்கு அடிமையாகிறார். தாம் பிறந்த ஊராகிய திருநாவலூர் இறைவன் மீது ஒரு பதிகம் பாடியிருக்கிறார். இது பித்தனார்க்கு அடிமைத்திறம் பேணிப்பிறகு ஆரூர் சென்று, தொண்டைநாட்டுப் பயணம் மேற்கொண்டபோது தாம் பிறந்த ஊராகிய திருநாவலூர் வந்து பதிகம் பாடுகின்றார். அந்தப் பதிகம் முழுவதிலும் திருவெண்ணெய் நல்லூர்ச் செய்தி பற்றியே கூறுகின்றார்.

திருவெண்ணெய்நல்லூர் நிகழ்ச்சிக்குப்பின் தாம் பிறந்த ஊராகிய திருநாவலூர் வந்தும் பாடியிருக்கலாம். ஆயினும் சேக்கிழார் அவ்வாறு கொள்ளவில்லையாதலின் அந்நெறியே பின்பற்றிச் செல்லும் கடமையை அறிஞர் மேற் கொண்டுள்ளனர்.

"தன்மையினால் அடியேனைத் தாம் ஆட்கொண்டநாள்
சபைமுன்
வன்மைகள் பேசிட வன்தொண்டன் என்பதோர்
வாழ்வுதந்தார்" (7.17.2)

"செம்பொனார் தீவண்ணர் தூவண்ணநீற்றர் ஓர்
ஆவணத்தால்
எம்பிரானார் வெண்ணெய் நல்லூரில் வைத்து
எனை ஆளும் கொண்ட
நம்பிரானார்" (7.17.5)

என்றும் தன்வரலாறு கூறும் சுந்தரர் இப்பதிகத்தில்தான்

"நாதனுக்கு ஊர் நமக்கு ஊர் நரசிங்கமுனையரையன்
ஆதரித்து ஈசனுக்கு ஆட்செய்யும் ஊர்
அணிநாவலூர்" (7.17.11)

தன் வரலாற்றோடு இணைந்த நரசிங்கமுனையரையரையும் குறிப்பிட்டருளுகின்றார்.

நம்பியாரூரர் தம்மை ஆட்கொண்ட செயலைக் குறிக்கும் போதெல்லாம் ஆவணம் பேசப் பெறுகிறது; ஆட்கொண்ட முறை பேசப் பெறுகிறது.

"மண்ணின்மேல் மயங்கிக் கிடப்பேனை வலியவந்து
எனை ஆண்டுகொண்டவனே" (7.70.2)

என்று ஒரே ஒரு முறை கூறுகின்றார். தடுத்தாட் கொண்டதாக யாண்டும் குறிப்பிடவில்லை. சிற்றம்பலத்தில் பேரம்பல தரிசனம் கிடைத்தகாலை கூறுவது தவிர.

"மற்றுநீ வன்மை பேசி வன்தொண்டன் என்னும்
நாமம் பெற்றனை"

-பெரியபுராணம், தடுத்தாட்கொண்ட புராணம் 70.

என்ற சேக்கிழாரின் கூற்று, வன்மை பேசியதனால் வன்தொண்டன் என்னும் நாமம் பெற்றார் என்பது சுந்தரர் தம் திருவாக்கினாலேயே அறிய வந்த செய்தி. வரலாற்றை நோக்கும் போது சபைமுன் வன்மை பேசியதாக் கொள்ளவே முடியாது.

சேக்கிழார் 'பெற்றனை' என இறந்த காலத்தாற் கூறியதை உடன்கொண்டு நோக்கினால் ஒருவேளை திருக்கயிலைச் சபையிலேயே நடைபெற்றிருக்குமா என ஐயுறுவோரும் உண்டு. வன்தொண்டன் என்பதற்கு வேறு ஒரு காரணம் நுட்பமாகக் கூறப்பெறுகிறது. சிவப்பிரகாச அடிகளாரால்,

"திருவொற்றியூர்ப் பெருமானே வலியவந்து நம்பியாரூரைச் சங்கிலியால் (சங்கிலிநாச்சியார்) இழுத்துக்காட்டி, உலகமாயை எனப்பெறும் பரவையினுள் (பரவைநாச்சியார்)- கடலுள் ஆழ்ந்து அமிழுமாறு ,அமிழ்த்தியாயினும் நம்பியாரூரன் அடிமைக்கு அன்புசெய்வதிலும் ஆட்செய்வதிலும். அதன்மூலம் நல்ல இன்பம் அடைந்திருப்பதிலும் தவறமாட்டார்" என்ற கருத்தை உணர்த்தும் வகையில்

"செல்வநல் ஒற்றியூரன்
செய்ய சங்கிலியால் ஆர்த்து
மல்லலம் பரவை தன்னுள்
மாழ்குற அமிழ்த்து மேனும்
அல்லும் நன்பகலும் நீங்காது
அடிமைக்கு அன்பு செய்து
நல்ல இன்பு அடைந்திருப்பான்
நம்பி ஆரூரன் தானே

என்பது நால்வர் நான்மணி மாலை 35 ஆம் செய்யுள் இதனை,

"அழுக்கு மெய்கொடு உன் திருவடி அடைந்தேன்
அதுவும் நான்படப் பாலது ஒன்றானால்
பிழுக்கை வாழியும் பால்கொள்வர் அடிகள்
பிழைப்பனாகிலும் திருவடிப் பிழையேன்
வழுக்கி வீழினும் நின்திருப் பெயரல்லால்
மற்று நான் அறியேன் மறுமாற்றம்
ஒழுக்க என்கணுக்கு ஒரு மருந்துரையாய்
ஒற்றியூரெனும் ஊருறைவானே (7. 5. 4. 1)

என்பது முதலாக, நம்பியாரூரர் பேசும் பல பாட்டுக்கள் ஆதாரமாக அமைகின்றன.

வன்மைகள் பேசியமையால் வன்தொண்டன் என்பதை, தடைகள் நேர்ந்தபோதிலும், இறையடிமையை நிறைவுறுத்தத் தடையான சூழ்நிலைகள் பலவந்து தாக்கினாலும், தாழ்ச்சி கொள்ளாமல் தொண்டில் வலிமையை மேற்கொள்ளல் என்பதைக் கொள்கையாகக் கொண்டு செயல்முறைப் படுத்தினார் என்று கொள்வதிலும் தடையில்லை.

தொண்டு செய்வதிலேயே சிவனுக்கு ஆட்பட்டு நல்ல இன்பம்-அருளின்பம் துய்த்துக் கொண்டு வாழ்ந்திருந்தார் என்றும் கொள்ளலாம்.

## தம்பிரான் தோழராதல்

சுந்தரர்தம் வரலாற்றைச் சுந்தரரே நடத்திச் செல்கிறாரா அல்லது இறைவனே முன்னின்று வலியவந்து நடத்திச் செல்கிறாரா என ஐயம் எழும் வகையில் இறைவன் சுந்தரர் வரலாற்றில் இடையுறவு கொள்கிறார்.

"எம்மான் எந்தை மூத்தப்பன் ஏழேழ்
படிகால் எமை ஆண்ட
பெம்மான்"

என்று வழிவழியாக அடிமை பேணுபவன் என்பதைப் பேசி,

"நெய்யும் பாலும் தயிரும் கொண்டு
நித்தல் பூசனை செய்யலுற்றால்
கையில் ஒன்றும் காணம் இல்லை"

என்று நெய்யும் பாலும் தயிரும் கொண்டு பூசை செய்ய வேண்டும் என்றால் நமக்கு அர்ச்சனை பாட்டே ஆகும் ஆதலால் மண்மேல் நம்மைச் சொற்றமிழ் பாடுக' என்று மடைமாற்றி விடுகின்றான் இறைவன்.

"அத்தா உனை வேண்டிக் கொள்வேன் தவநெறியே"

என்று திருத்துறையூரில் வேண்டியபின் தில்லைக்குப் போகிறார். தில்லையில் "ஆரூருக்கு வருக" என்ற இறை ஆணை அமைகிறது. திருவாரூர் செல்கிறார்.

இறைவன் முன்கூட்டியே திருவாரூர் மக்களிடம் 'ஆரூரன் நாம் அழைக்க வருகிறான்' என்று கூறி வரவேற்பு ஏற்பாடு நடைபெறச் செய்கிறான்.

திருவாரூரில் வரவேற்பு முடிந்து இறை வழிபாடு முடிந்ததும்,

"வாழிய மாமறைப் புற்றிடங்கொள் மன்னவன்
ஆரருளால் ஓர்வாக்கு
தோழமையாக உனக்கு நம்மைத் தந்தனம், நாம்முன்பு
தொண்டு கொண்ட

**வேள்வியில் அன்றுநீ கொண்ட கோலம் என்றும்**
**புனைந்து நின்வேட்கை தீர**
**வாழிமண் மேல் விளையாடுவாய் என்று ஆரூரர்கேட்க**
**எழுந்ததன்றே.**

-பெரியபுராணம்- திருத்தாட்கொண்டபுராணம் 127.

இதனுள் காணப்பெறும் செய்திகள் மூன்று:

1. தோழமையாக நம்மைத் தந்தனம்

2. நாம் முன்பு தொண்டு கொண்ட வேள்வியில்
அன்று நீ கொண்ட கோலம் என்றும் புனைக.

3. நின் வேட்கை தீர வாழி, மண்மேல் விளையாடுவாய்

என்பனவே அவை. தோழமை தந்த செய்தியை நம்பியாரூரரே

"தன்னைத் தோழமை அருளித் தொண்டனேன் செய்த
துரிசுகள் பொறுக்கும் நாதனை" (7. 68. 8.)

"என்னுடைய தோழனுமாய் யான் செய்யும்
துரிசுகளுக்கு உடனாகி" (7. 51. 1.)

"ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய
தோழனுமாய் யான்செய்யும் துரிசுகளுக்கு உடனாகி"
(7. 51. 10.)

"தாதனை என்றனை ஆள் தோழனை" (7. 84. 9.)

என்று கூறும் திருவாக்குக்களால் அறியலாம்.

இறைவன் தம்மைத் தோழனாகத் தந்ததைக் குறிப்பிடும்போதெல்லாம் சுந்தரர் பெருமான் தாம் குற்றம் இழைப்பதற்கு ஒருகாரணம் அதுவே என்பது போல இணைத்துக் குறிப்பிடுகின்றார். மேலும் அவர், தோழனாகி யான் செய்யும் துரிசுகளுக்கு உடனாகியும் நின்றான் என்று குறிப்பிடுவதையும் உணர்ந்து தெளிதல் வேண்டும்.

## நட்பியல் நெறி

சைவசித்தாந்தத்தில் நால்வகை நெறிகள் பேசப் பெறுகின்றன. இறைவனை அடைதற்குரிய நெறிகள் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற நான்கு நெறிகள் உண்டு என்பது அக்கொள்கை.

இறைவனை ஆண்டானாகக் கொண்டு ஆன்மாவானது தன்னை அடிமை எனநிறுத்தித் தொண்டுசெய்யும் நெறியே சரியைநெறி என்றும் ஆண்டான் அடிமை நெறி என்றும் பேசப்பெறும்.

இரண்டாவதாக அமைவது கிரியை நெறி. இறைவனைத் தந்தையாக நிறுத்தி, ஆன்மாவானது தன்னை மகனாக நிறுத்தித் தொண்டு செய்யும் நெறியே கிரியை நெறி என்றும் இதனைத் தந்தை மகன் நெறி என்றும் விளக்குவர்.

சரியை நெறியைத் தாசமார்க்கம் என்றும் அதற்கு இலக்கியமாகத் திகழ்ந்தவர் திருநாவுக்கரசர் என்றும் கொள்வது மரபு.

கிரியை நெறியைச் சற்புத்ர மார்க்கம் என்றும் அதற்கு இலக்கியமாகத் திகழ்ந்தவர் திருஞானசம்பந்தர் என்றும் கொள்வது மரபு.

மூன்றாம் நிலையில் அமைந்ததாய் முன்னை இரண்டு நெறிகளின் வளர்ச்சியாய் அமைந்ததே 'தோழமை நெறி' என்று பேசப்பெறும் யோக நெறி. இந்நெறிக்கு இலக்கியமாகத் திகழ்ந்தவர் திருநாவலூர்ரர் எனப்பெறும் சுந்தரமூர்த்திசுவாமிகள் என்பது மரபு.

சுந்தரர் யோகநெறி சார்ந்து நின்றவர் என்று கூறுவதற்கு ஐயம் ஏதும் இல்லை. அவர்தம் வாழ்நாளில் சிறந்த சிவயோகியாராகத் திகழ்ந்தவர்.

பரவைநாச்சியார் சங்கிலிநாச்சியார் என்ற இருவரையும் மணம் செய்து வாழ்ந்தபோதும் அவர்களோடு கூடியிருந்த

காலத்தும் அவர் 'பன்னாளும் பயில் யோக பரம்பரையின் மேவினார்' என்றே சேக்கிழாரடிகள் கூறுவாராயினர்.

"தென்னாவலூர் மன்னன் தேவர்பிரான் திருவருளால்
மின்னாருங் கொடி மருங்குல் பரவையெனும் மெல்லியல் தன்
பொன்னாரும் முலை ஓங்கல் புணர்குவடே சார்வாகப்
பன்னாளும் பயில் யோக பரம்பரையின் விரும்பினார்"

-பெரியபுராணம். தடுத்தாட்கொண்ட புராணம் 181.

என்பது சேக்கிழார் வாக்கு. இவ்வாறே சங்கிலியாரைத் தந்தபோதும்,

"மான்திகழும் சங்கிலியைத் தந்து வரு பயன்களெல்லாம்
தோன்ற அருள் செய்தாய்" (7. 89. 10.)

"நொய்யேனைப் பொருட்படுத்துச்
சங்கிலியோடு எனைப் புணர்த்த தத்துவனை" (7. 51. 11.)

"ஓர்ந்தனன் ஓர்ந்தனன் உள்ளத்துள்ளே ஒண்பொருள்
சேர்ந்தனன் சேர்ந்தனன் சென்று திருவொற்றியூர் புக்குச்
சார்ந்தனன் சார்ந்தனன் சங்கிலிமென்தோள் தடமுலை
ஆர்ந்தனன் ஆர்ந்தனன் ஆமாத்தூரையன் அருளதே"
(7. 45. 4.)

என்றெல்லாம் கூறும் நம்பியாரூரர் திருவாக்குக்களை உன்னுக. சங்கிலிநாச்சியாருடன் கொண்டிருந்த உறவை விளக்க வரும் சேக்கிழார்,

"இந்நிலையிற் பேரின்பம் இனிதமர்வார்"

என்றே பேசினார்.

-பெரியபுராணம், ஏயர்கோன்புராணம். 268

மேலும், 'பெருமிழலைக் குறும்பர்' என்னும் பரம சிவயோகியானவர் நம்பியாரூரரையே தம் இருகண்களாகக் கொண்டு உலகையும் திருவருளையும் ஒருசேர்க்கண்டு களித்து வந்தவர் என்பதையும் பெருமிழலைக் குறும்பநாயனார் புராணத்தில் தெளியலாம்.

இதனை நுட்பமதியொடும் விளக்க வந்த சிவப்பிரகாசர்

"பெருமிழலைக் குறும்பரெனும் பரமயோகி
பெரிதுவந்து உன் திருவடித் தாமரையைப் போற்றி
விரைமலர் தூய் வந்தனை செய்கின்றாரென்றால்
விளங்கிழையார் இருவரொடும் முயங்கலாமோ"
உரைமதி நின்றனை வெறுப்பது என்சொல் நின்னை
உடையானுக்கு அடுத்த செயல் உனக்குமாயின்
சுரர் முனிவர் பரவலுறும் பெருஞ்சீர்த் தொண்டத்
தொகைசெய்தோய் அறம்முதல்நால்வகை
செய்தோயே"

-நால்வர் நான்மணிமாலை 39.

பரவைநாச்சியாரை வெளி (*space*) என்ற தத்துவமாகவும், சங்கிலி நாச்சியாரை காலம் (*Time*) என்ற தத்துவமாகவும் கொண்டு இரண்டையும் கடந்துநின்றார் என்று கொள்வது மெய்ப்பொருளியற் கொள்கை. ஆரூரும் ஒற்றியூரும் இருமையில் நின்ற ஒருமை. இருதலங்களும் ஒரே அடிப்படையைக் கொண்டிருந்தாலும் இருமை நெறி கடத்தலுக்கு எடுத்துக்காட்டாக நின்றவை. இதனாலேயே ஆரூர்நெறி வேறு ஒற்றியூர் நெறி வேறு என்று பேசுகிறார் வள்ளலார். ஒற்றியூர் நியமம் என்று பேசுவது வள்ளலாரின் கொள்கை.

ஆரூரையும் ஒற்றியூரையும் இணைத்து மருவியுயர்ந்ததே உத்தர ஞானம் என்று தம்முடைய உத்தரஞான சிதம்பர விளக்கத்தில் குறிப்பிட்டுள்ளார்.

சுந்தரர் பெருமான் சிவயோகியாக வாழ்ந்திருந்த வரலாற்றுண்மையாலும், இறைவனே தன்னைத்தோழனாக அமைத்துக் கொடுத்த வரலாற்றுப் பெருமையாலும் இரண்டையும் ஒன்றாகவே எண்ணி எடுத்து இயம்பும் மரபு உண்டாயிருத்தல் வேண்டும்.

சைவசித்தாந்தம் ஏற்கும் மூன்றாம் நெறியாகிய யோகமார்க்கம் வேறு, தோழமை நெறி வேறு. யோக நெறியில் இறைவனும் ஆன்மாவும் ஒத்த நிலையில் நின்ற

நிலையும், இறைவனைச் சார்ந்து ஆன்மா நின்ற நிலையும் உணரப்பெறுவன. சோகம்பாவனை முதலிய விளக்கங்களிற் காண்க. அத்தகைய சிவயோகத்தாற் பெறுவது சுத்தாத்வைத ஞானமே.

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன ஆன்ம வளர்ச்சி நிலைப் படிகள். அரும்புமலர் காய்கனிகள் அன்றோ பராபரமே என்றார் தாயுமானவர். அவைகளைப் பயிற்சியிற் பெறுதற்கு ஆன்மாக்கள் ஆண்டான் அடிமை, தந்தை மகன்மை, தோழமை நிலை ஆகிய உறவியல் முறைகளை உபாயமாகக் கொள்ளலாமேயன்றி அவை உண்மையில் அவ்வாறு அமைவன அல்ல என்று தெளிதல் வேண்டும்.

ஆண்டானாக என்னைத் தருதும் என்றோ தந்தையாக என்னைத் தருதும் என்றோ யாண்டும் பெருமான் கூறிய வரலாறு இல்லை.

எனவே, "தோழனாக நம்மைத் தந்தமை" என்று பேசியதன் பொருளைப் பிரித்து உணர்தல் வேண்டும்.

"நம்மைத் தோழனாகத் தந்தமை" என்று இறைவன் கூறினாலும் நம்பியாரூரர் தம்மை மீளா அடிமை என்றுதான் கூறிக்கொண்டார்.

தோழனாகத் தந்தருளிய காரணத்தால் தான் பல துரிசுகள் (குற்றங்கள்) புரிவதற்குக் காரணமானேன் என்று நம்பியாரூரரே எடுத்தியம்புகின்றார். சிறந்த சிவயோகிகளுக்கும் துரிசுகள் நிகழ்வதற்குக் காரணமாக அமையும் ஒருநெறியானது அனைத்துயிர்களையும் ஈடேற்றக் கூடியதாக அமையும் சாதனமாக அமைய முடியாது. இதனை மெய்ப்பொருளுலகம் மேலும் சிந்தித்து ஆராய்தல் வேண்டும்.

ஆயின் தோழமைநெறியின் உட்பொருள் தான் யாதாக அமைய முடியும்?

ஆன்மா என்றொரு பொருள் உண்டு. அஃது இறைவனால் படைக்கப்பெறாதது. இறைவன் போலவே ஆன்மாவும் என்றும் உள்பொருளே. ஆயினும், ஆன்மாவானது என்றும் என்றென்றும் வழிவழி அடிமையே.

"என்றுநீ அன்றுநான் உன்னடிமை அல்லவோ"

என்பது தாயுமானவர் திருவாக்கு.

ஆன்மாவானது இருமை இணைந்த இணைப்பு. தன்னுண்மை நிலை (*EGOISM*), சமுதாயநிலை (*ALTRUISM*) என்ற இருமை கலந்த இணைப்பு. இருநிலைகளும் தத்தம் தனிநிலைகளில் செம்மைபெற்றால் உயர்ந்த ஒருமை நிலையைப் பெறமுடியும். ஆன்மாவானது தன்னுண்மை நிலையில் அழுக்கு நீங்கப் பெறுவதானால் அது 'யான்' என்ற அழுக்கை நீக்க வேண்டும். அதே ஆன்மாவானது சமுதாய நிலை எனப்பெறும் (*ALTRUISM*) என்ற பகுதியின் அழுக்கு நீங்கப் பெற வேண்டுமானால் 'எனது' என்னும் அழுக்கை நீக்க வேண்டும். அதனால்தான் ஆணவமும் 'யான், எனது' என்ற இரண்டாக நின்று ஆன்மாவைப் பிணிக்கிறது.

எனவே ஆன்மாவானது தன்னிலை வளர்ச்சியும் சமுதாய நிலை வளர்ச்சியும் ஆகிய இருமை வளர்ச்சியையும் இணையப் பெற்றால்தான் முழுமை பெற முடியும்.

தன்னிலையில் வெற்றிபெறுவது பசுநிலை
சமுதாயநிலையில் வெற்றிபெறுவது காளைநிலை

மேலே கூறிய கருத்தைத் தொல்காப்பியம்

"பகட்டினானும் ஆவினானும்
துகள்தபு சிறப்பின் சான்றோர் பக்கமும்"

என்று குறிப்பிடும். தொல்காப்பியம் 1022.

எனவே, தன்னிலை வெற்றியை முல்லை என்றும் சமுதாய வெற்றியை வாகை என்றும் இரண்டாகப் பாகுபடுத்திக் காட்டி, இருமையையும் 'இணைத்த வெற்றியை எய்துதல் வேண்டும் என்று தமிழகச் சான்றோர்கள் அறுதியிட்டுக் காட்டினார்.

எந்த ஒரு ஆன்மாவும் தன்னிலை வெற்றி பெற்றால் மட்டும் போதாது, சமுதாயப் பிரிவையும் நிறைவு செய்யும் வகையில்

சமுதாய வெற்றியையும் பெற்றால்தான் ஆன்ம நிலையானது முழுமை வளர்ச்சியைப் பெறமுடியும். இக்கருத்தைத் திருக்குறளின் வழிநின்று நோக்கலாம்.

ஆன்மாவுடன் உடல் இணைக்கப்பெறுகிறது. ஆன்மா வானது உடலால்தான் அனுபவம் பெற்று ஞானம் பெற வேண்டும். உயிரால் வாழ்நிலைபெறுகிறது உடல்.

உடம்பில் எழும் இயற்கை அருவி ஊற்று 'அன்பு' எனப்பெறும். அந்த அன்பின் வளர்ச்சியாக அருள் உண்டாகும். இஃது அன்பில் நிகழும் முதன்மை வெளிப்பாடு. அன்பானது அருளானது மலர்தல்.

"அருள் என்னும் அன்பு ஈன்குழவி பொருள் என்னும்
செல்வச் செவிலியாலுண்டு"

-திருக்குறள் 757.

இது 'பொருள் செயல் வகை' என்ற அதிகாரத்தில் சொல்லப் பெறுவது ஏன் என்பதையும் சிந்தித்தல் வேண்டும்.

அன்பு அதன் வெளிப்பாடு அருள்

அன்பால் இல்லறநெறிநின்று, பின்னர் 'அருள்' வெளிப்பட்டபின் துறவு நெறிநின்று, வளர்ச்சியெய்துதல் வேண்டும்.

அவ்வகையில் அவா அறுத்து, மெய்யுணர்வு பெற்று ஆன்மாவானது *(EGOISM)* தன்னிலை எனப்பெறும் அழுக்கு நீங்கப் பெறும். அதனால் 'யான்' எனப்பெறும் அழுக்குநீங்கும்.

அடுத்தநிலையில் அன்பானது மீண்டும் ஊற்றெடுத்து வேறொரு பாதையை உருவாக்குகிறது.

"அன்பீனும் ஆர்வ முடைமை; அது ஈனும்
நண்பு என்றும் நாடாச்சிறப்பு"

- திருக்குறள் 74.

இஃது இரண்டாம் நிலை வெளிப்பாடு. இங்கே அன்பானது ஆர்வம் என்ற வெளிப்பாடாக மலர்கிறது. ஆர்வமுடைமை என்பதுதான் 'நட்பு' என்ற மலர்ச்சியை உண்டாக்குகின்றது.

'நட்பு' என்ற நிலை அன்பின் இரண்டாம்நிலை வளர்ச்சியே. இதன் பெருக்கத்தினால் 'எனது' என்னும் சமுதாய அழுக்கானது நீக்கப்பெறுகிறது. எனவே அன்பின் இருவகை வெளிப்பாடுகளும் ஆன்மாவுக்கு அவசியமே.

ஆன்மாவின் தன்னிலைப் பிரிவும் சமுதாயநலப் பிரிவும் தூய்மை பெறுவதற்கு இத்தகைய இருமைநிலை வெளிப்பாடும் தேவை.

ஆன்மாவானது தன்னிலையில் தூய்மைபெற்று விளங்குவதற்கு அன்பின் முதல் வெளிப்பாடு தேவையானது. அன்பு அருளாக மலர்தல். அதனால் ஆன்மாவானது ஐயத்தின் நீங்கி, நிலையாமை உணர்ந்து, அவா வறுத்து, மெய்யுணர்வு பெற்று வீட்டு நிலை எய்தும்.

ஆன்மாவின் சமுதாயநிலையானது தூய்மை பெறுவதற்கு அன்பின் இரண்டாம்நிலை வெளிப்பாடு தேவை. அஃது ஆர்வமுடைமையாக மலர்ந்து நட்பாக வெளிப்பட்டு நின்று சிறக்க வேண்டும்.

தன்னிலை வளர்ச்சியால் ஆன்மாவானது மறுத்துக் கடந்த அதீத ஞானம் எனப் பெறும் சுத்த ஞானம் பெறும்

"ஓர்த்து உள்ளம் உள்ளது உணரின் ஒருதலையாப்
பேர்த்து உள்ள வேண்டாப் பிறப்பு"

-திருக்குறள் 357

என்றும்,

"ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லா தவர்க்கு"

-திருக்குறள் 354

என்றும் கூறிய குறட்பாக்களை நோக்குக.

சமுதாயநிலை வளர்ச்சியில் ஆன்மாவானது மருவியுயர்ந்த உத்தரஞானம் பெறும். இங்கே உலகினர் எவரையும் - எந்த உயிரையும் முரண் எனக் கருதிப் பகை கொள்ளாது, அவர்தம் கொள்கைகளும் இறைவன் ஒருகாலத்தில் உண்டாக்கிக் கொடுத்த கொள்கைகளே என்ற ஞானம் எழும். அது மருவியுயர்ந்த ஞானம்.

இதுவே நட்பியல் நெறி. நட்பியல் நெறியால் புல்லறிவாண்மை, கார்றிவாண்மை, கயமை என்ற மூவகை அறியாமைகளும் நீங்கும். சான்றாண்மை என்ற நிறைநிலை கைகூடும்.

சுந்தரர் வரலாற்றில் நட்பியல் நெறியின் விளக்கமாக அமைவதே தோழமை தந்த நெறி.

நட்பியல் நெறியால் ஒரு தனிமனிதன் தன்னைத் தேசமாக உயர்த்திக் கொள்ள முடியும். ஆளாகக் கொண்டதும் வன்தொண்டரானதும் ஆகநின்ற வளர்ச்சியானது அன்பின் முதல் வெளிப்பாடாக நின்ற தன்னிலை வளர்ச்சியே. சமுதாயப்பிரிவு வளர்ச்சியின் அடிப்படையில் ஆரூரர் தம்பிரான் தோழனாகிறார். நட்பியல் நெறி வளர்ச்சியைப் படிப்படியாக இறைவன் ஆரூரருக்கு வாழ்வியல் நெறியாக அமைத்துக் காட்டுகின்றார்.

1. குண்டையூர்க் கிழவர் தொண்டு. குண்டையூர்க் கிழவருக்கு இறைவன் தந்த நெல்லைப் பூதங்கள் கொண்டுவந்து குவிக்கின்றன. இங்கே பரவை நாச்சியார் அவரவர்தம் வீட்டின் முன் கிடக்கும் நெல்லை அவரவரே எடுத்துக் கொள்ளுங்கள் என்ற ஆணையின் வழி பிறக்கும் சமுதாய வளர்ச்சி.

2. திருநாட்டியத்தான் குடியில் கோட்புலிநாயனார் தம்முடைய பிள்ளைகள் இருவரையும் ஆரூரருக்கு உரிமையாக்கியபோது அவர்களைத் தம் மக்களாக ஏற்றமை.

3. ஏயர்கோன் கலிக்காமர் பகைமை நீங்கப் பெற்றமை.

4. சேரமான் பெருமாள் நாயனார் நட்பு.

5. மூவேந்தர் நட்பு. மூவேந்தருக்கும் ஆருரின் தம்மாளி கையிலேயே உணவு வழங்குகின்றார் ஆரூரர். மூன்று அரசர்களையும் ஒருமையில் நிறுத்தி நட்புடன் வாழச் செய்ததோடன்றி, மூவரையும் இணைத்து நிறுத்தி இறைவனை வணங்குமாறு செய்த நட்பியல் நெறி.

6. நட்பியல் நெறியின் வந்த வாழ்வுதான் சுந்தரர் பெருமான் முதலை உண்ட பாலனை அழைத்தது.

பக்குடுக்கை நன்கணியார் என்னும் சங்ககாலப் புலவர் ஓரில் "நெய்தல் கறங்கவும் மற்றோர் இல்லில் மணமுரசு ஆர்ப்பவும்" என இவ்விருநிலைகளில் அமைந்த துன்பமே, மாறிநிற்கும் நிலையே உலகியல்நிலை என்றும் 'இன்னாது அம்ம இவ்வுலகம்' என்றும் இதன் நடுவே இவ்வுலகின் இயல்புணர்ந்து இனிமை காண்க என்றும் கூறிப்போனார்.

உலகின் இயற்கை இதுவே என அறிந்து நிற்கும் நிலையில் எந்த ஒரு சமுதாயத் தத்துவஞானியும் இக்கொள்கையை எதிர்த்து நிற்கவில்லை. சுந்தரர் பெருமான் ஒருவர்தான் இது துன்பமும் இன்பமும், அழுகையும் சிரிப்பும், தீமையும் நன்மையும்" எதிரெதிர் நிற்பவை அல்ல; இவ்வுலகியற்கையை மாற்ற முடியும் என்று சமுதாயப் புரட்சி செய்தார்.

அவினாசியில் எதிர் எதிர் இல்லத்தில் அழுகையும் சிரிப்பும் நிகழ்ந்தன. சங்ககாலப் புலவர் முதல் சுந்தரர் வரை உள்ள கால அளவையில் வந்து சென்ற அனைவரும் இக்கொள்கையை மாற்றி அமைக்க முற்படவில்லை. சுந்தரர் ஒருவரே மாற்றினார். இருமை எதிர்நிலை எனக்கு மட்டுமன்று; எங்கள் பெருமானுக்கும் உடன்பாடன்று என்று எண்ணினார். முதலை உண்ட பாலனை அழைத்தார். 'பிள்ளை தரச்சொல்லு காலனையே' என ஆணையிட்டார். மாற்றிக் காட்டிய அற்புதம் நிகழ்ந்தது.

வானமும் நிலமும் ஒன்றெனக் காட்டினார். வானவழியில் தொடங்கிய பாட்டானது திருக்கயிலையில் முடிந்தது.

அதனை அங்கிருந்தே கடல் அரையன் மூலமாக அஞ்சைக் களத்து அப்பருக்கு அறிவிக்குமாறு கூறினார். அவருக்கு அனைத்து இடமும் உறவு ஆயின. அனைத்துயிரும் உறவு ஆயின. தேவர்கள் அனைவரும் வணங்கும் நிலை பெற்றார். அப்பொழுது அமைந்த மாற்றம் முழுவதையும்

"திருநொடித்தான் மலைத் திருப்பதிகம்" அமைத்து விளக்கிக் காட்டினார்.

ஞான ஆரூரரைச் சேரரை
அல்லது நாமறியோம்
மாவை ஆக்கை யொடும் புக்
கவரை வளரொளிப் பூண்!
வானவராலும் மருவற்கரிய
வடகயிலைக்
கோனவன் கோயில் பெருந்தவத்
தோர் தங்கள் கூட்டத்திலே

என்பது நம்பியாண்டார் நம்பிகள் அருளிய திருத்தொண்டர் திருவந்தாதியில் அமைந்த 86-ஆம் பாடல்.

## நட்பியல் நெறிக்கமைந்த சாத்திரம்

மெய்கண்டார் தாம் அருளிய சிவஞானபோதத்து மங்கல வாழ்த்துப் பாடலில் இறைவனை 'மலைவில்லார்' என்று குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். பரம்பொருளை அறியும் தன்மையில் மாறுபட்ட கொள்கைகளெல்லாம் எழுந்த போது ஒரு கொள்கையைத் தவறு என்றும் இன்னொரு கொள்கையை உயர்வு என்றும் கொண்டகாலத்து உணரப் பெறுபவன் அல்லன் எங்கள் இறைவன் அனைத்துக் கொள்கைகளும் பொருமறம் இலாமை ஒத்து நிற்க, வன்மை மென்மைகள் என்ற சோபான முறையில் அவைகள் இணைந்து நிற்க உணரும் உணர்வின்கண் உள்ளவனே இறைவன் என்பதைப் புலப்படுத்தவே, "மலைவில்லார்" என்ற தொடரைப் பயன்படுத்துகின்றார். இதனையே வட மொழியாயினும் தென் மொழியாயினும் 'சமன்வியம்' என்ற சொல்லால் அனைத்து மெய்ப்பொருள் நூல்களும் குறிப்பனவாயின.

இறைவனை நிர்க்குணன் என்றும் சற்குணன் என்றும் சொல்லப் பெறும் கொள்கைகள் உள்ளன. இரண்டும் முரண்பட நின்ற கொள்கைகள் அல்ல. படிநிலைவளர்ச்சியில் ஒன்றோடு ஒன்று இணைய நிற்கும் கொள்கைகளே! உண்மையில் மலைவு அல்லது முரண் என்பது கொள்கைகளில் இல்லை. அவனிடத்தும் மலைவு கொள்ளுதற்குரிய முரண்பாடுகள் இல்லை. இதனாலேயே அவன்முனிவர்களுக்கும் ஏனையோர்களிடத்தும் உண்டாகும் கொள்கை முரண்பாடுகளைத் தீர்த்து வைப்பவன் எனப் பெறுகிறான்.

'முரண்பாடு இன்மை' என்ற அடிப்படையில் அனைத்துக் கொள்கைகளையும் சமன்வயம் செய்து மயக்கறுத்து உண்மைப் பொருள் இஃது என்பதைச் சைவசித்தாந்தச் செந்நெறியில் நின்று உணர்த்த முற்படும் நிலையில் பரம்பொருளை 'மலைவில்லார்' என்றே சுட்டிக் காட்டியருளுவாராயினன். மெய்கண்டார் இத்தகைய ஒரு அடிப்படைக் கருத்தைக் கொள்ளுதற்கு உரிய மூலமாக இருந்தது காரைக்காலம்மையார் அருளிய அற்புதத் திருவந்தாதியே.

> நூலறிவு பேசி நுழைவிலா தார்திரிக
> நீலமணி மிடற்றான் நீர்மையே-மேலுவந்தது
> எக்கோலத்து எவ்வுருவாய் எத்தவங்கள் செய்வார்க்கும்
> அக்காலத்து அவ்வுருவே யாம்

என்றும்

> "பிறர் அறியலாகாப் பெருமையரும் தாமே
> பிறர் அறியும் பேருணர்வும் தாமே"

என்றும் அற்புதத் திருவந்தாதி 33, 30 ஆகிய பாடல்களிற் கூறினார்.

எனவே 'மலைவின்மை' என்பது சைவசித்தாந்த மெய்ப் பொருளியலானது உலகத் தத்துவஞானியர்க்கு விடுக்கும் அளவையியல் நெறி. அதுவே நட்பியல் நெறியின் சித்தாந்தம் எனக் கொள்ளவேண்டும்.

மேலும் மெய்கண்டார் தாம்அருளிய சிவஞானபோதத்து அவையடக்கத்தில் கொள்கைகள் உடங் கியைந்து தம்முட்புணர்தல் வேண்டும் என்று குறிப்பிட்டார். அப்படி இல்லாமையால் உலகில் உள்ள பல்வேறு மெய்ப் பொருளியற் கருத்துக்கள் பிழைகள் போலத் தோற்றும்; பிறரால் மறுத்துரைக்கப் பெறும் என்று கூறி, அவைகளையும் மெய்ப் பொருட்கொள்கைகளே என்று ஏற்றார்.

இன்று புறச் சமயத்தார், புறப்புறச் சமயத்தார், மேலும் புறப்புறப்புறச் சமயத்தார் கொள்கைகள் எனப் பிரிவுபெற்று நின்றாலும் அவைகளெல்லாம் சைவசித்தாந்த செந்நெறிக் கொள்கைகளுக்கு முரண்பட்ட கொள்கைகள் அல்ல. அவைகள் "**கேள் ஆம் புறன்**" எனநிற்கும் கொள்கைகள் என்றார். இன்று புறக் கொள்கைகளாக இருப்பினும் அவைகள் கேள் ஆம் — உறவாக அமையக் கூடிய கொள்கைகளே என்று அறிவுறுத்துவாராயினர். எனவே நட்பியல்நெறி என்பதே சைவ சித்தாந்தக் கொள்கையின் அடிநிலை உயிரோட்டமாக நின்றது எனக் கொள்ளுதல் வேண்டும்.

## சுந்தரர் கூறும் ஒரு குறை

தோழமை நெறியால் விளையும் குறை ஒன்று உண்டு என்று அடிக்கடிக் கூறுகிறார். அதைத் 'துரிசு' என்று குறிப்பிடுகின்றார். சுந்தரர் தம் வாழ்க்கையில் நின்ற ஒரே ஒரு செயலைத்தான் துரிசு என்று குறிப்பிடுகின்றார். துரிசு என்று கூறுவதோடு அல்லாமல் அது நடைபெறும் போது இறைவனும் உடனாய் இருந்து செல்கிறான் என்று குறிப்பிடுகின்றார்.

தோழமை நெறியில் நட்பியல் நெறியில் இறைவனுக்கும் தனக்கும் உரிய உறவமைப்பில் எத்துணை உயர்வு தாழ்வுகள் குற்றம் குறைகள் வரினும் பொறுத்துக் கொள்வன் இறைவன். சுந்தரர் "மகத்திற் புக்கதோர் சனி எனக் கானாய்" என்பது முதல் பல்வேறு வகையாக நயந்தும் எதிர்த்தும் சிந்திக்கிறார். இறைவன் அவற்றையெல்லாம் ஏற்றுக் கொள்கிறான். சுவையுடன் சாப்பிட்டுப் பழகியவனாயிற்றே சுந்தரன் என்று

எண்ணிச் சுவையாகச் சமைப்பவர் வீட்டிற்குச் சென்று பிச்சையெடுத்து வந்து கொடுத்துச் சாப்பிட வைக்கிறான். சுந்தரர் வரலாற்றைக் காணும்போது இறைவன் ஐந்தொழில் புரியும் காரியம் முதலானவற்றைக் கூடத் துறந்துவிட்டு, சுந்தரர் பின்னாலேயே சுற்றிக் கொண்டிருந்தானோ என்று கூடத் தோன்றுகிறது. இப்படி இருந்த இறைவன் சுந்தரர் தம் கண்களை வாங்கிக் கொண்டான்.

'பெருமான் இருக்கின்றாரா?' என்று வினவிய சுந்தரருக்கு 'உளோம் போகீர்' என்றான். 'உளோம் போகீர்' என்ற வார்த்தையின் தொனிப்பொருளைக் கேட்டுத் துடிக்கிறார் சுந்தரர். "உளோம் போகீர்" என்றானே என்று கரைந்து கரைந்து ஒரு பதிகம் பாடுகிறார் சுந்தரர். கண் கேட்டால் கோல் கொடுத்தான். இவ்வளவு கடுமை ஏன் வந்தது?

சுந்தரர் சமுதாய அறத்தை மீறினார். நட்பியல் காரணமாகத் தமக்குச் செய்த குற்றம் மலையத்தனை இருந்தாலும் பொறுப்பர். பிற உயிருக்கு, அடியவருக்கு சமுதாயத்துக்கு ஒருகுற்றம் செய்யினும் மன்னிக்க மாட்டான் அவன் என்பதை உணர்த்துகின்றான் இறைவன்.

ஆணை வைத்து மீறினால் அது சமுதாயக் குற்றம். பின்னர் ஒருவரும் அறத்தை மதியார். அறம் அழியநின்ற குற்றம் வரும். தனிமைக்குற்றம் பொறுத்துணரப் பெறும்; சமுதாயக் குற்றம் தண்டனை கொடுத்தே தீர்க்கப் பெறும் என்பதை உணர்த்தவே இத்தகைய செயலில் இறங்குகிறான் இறைவன்.

இதனை முன்கூட்டியே உணர்த்தி, சமுதாயக் குற்றம் செய்தால் நட்பியல் நெறியின் கட்டுக் கோப்பே அழிந்து விடும் என்பதைச் சுந்தரருக்கு அறிவுறுத்தியிருக்கலாமே! அதைத்தானே சுந்தரர் கேட்கிறார்! உடனிருந்து செய்தானே என்கிறார்.

உண்மை. தோழமைநெறியில் இத்தகைய தூரிசு ஒன்று உண்டு என்பதைச் சுந்தரருக்கு உணர்த்தியிருந்தால் நிகழ்வு நடவாமற் போயிருக்கும். உலகத்துயிர்களுக்கு இத்தகு கொள்கைச் செய்தி விளங்காமலே போயிருக்கும்.

தோழமை நெறியில் குற்றத்தை நேராகத் தோழனுக்குச் செய்யலாம். அவ்வுரிமை கொண்டு, குற்றத்தைச் சமுதாயத்துக்குச் செய்துவிடக்கூடாது என்ற படிப்பினையே இறைவன் யாரைக் கொண்டு இவ்வுலகத்துயிர்களுக்கு உணர்த்த முடியும்? அவனே நேர்நின்று எப்படி உணர்த்துவான்? அவன் இக்கொள்கையை உணர்த்துவதற்கு அவனுடைய தோழராகிய சுந்தரரையே பயன்படுத்திக் கொண்டான் என்றே கொள்ளுதல் வேண்டும்.

## தோழமைநெறியில் விளைந்த துளக்கரும் பண்பு

இறைவன் அனைத்துப் பொருள்களிலும் உறைபவன். இறைவனடியவர்கள் தம்மைச் சமுதாயமாகத்தான் மலர்வித்துக் கொண்டவர்கள். அனைத்துயிர்களும் முடி நிலையில் தம்மைச் சமுதாயமாகத்தான் மலர்வித்துக் கொள்கின்றன. உடம்பெடுத்த முதல்நிலையில் அனைத்துயிர்களும் சமுதாயத்தில் வாழ்கின்றன. இறைநிலை எனப்பெறும் திருவருள் பெற்று முடிநிலை எய்தும் காலத்தில் அவை ஒன்றும் சமுதாயமாக மலர்ந்து விளங்குகின்றன. அந்நிலையில் அடியவர்களுக்குச் செய்யும் குற்றம் சமுதாயக் குற்றமாக அமைகிறது. பிற உயிர்களுக்குச் செய்யும் குற்றம் சமுதாயக் கட்டுக் கோப்பைக் குலைப்பதாகிய சமுதாயக் குற்றம் ஆகிறது. எனவே, அவனை நேர்நிறுத்திச் செய்யும் குற்றம் குற்றமாகக் கருதப் பெறுவதில்லை என்று கொண்டாலே போதும். ஆனால் அவன் அவைகளைக் குணமாக ஏற்றுக் கொள்கிறான். ஆனால், சமுதாயக் குற்றத்தை அவன் எந்நாளும் மன்னிப்பதேயில்லை.

வடதிருமுல்லைவாயில் மாசில்லாமணியாய்த் திகழும் இறைவனை இறைஞ்சும்போது, கண்கள் இரண்டும் இல்லாமல், அவன் அழகைப் பார்த்து அனுபவியாமல், அவனது தூய்மையாம் தன்மையைக் கண்டு சுவைத்து விழுங்காமல் ஆராமையுடன் பாடுகின்றார்.

• "சங்கிலிக்கா என்கண் கொண்ட பண்பா" 7.69.3

"மாசிலாமணியே, பந்தனை கெடுத்து என்படுதுயர்
களையாய்" 7.69.3

என்று உருகி உருகிப் பாடும்போது ஒன்று சொல்லிப் பாடுகின்றார்.

"மற்றுநான் பெற்றது ஆர் பெறவல்லார்
வள்ளலே கள்ளமே பேசிக்
குற்றமே செயினும் குணமெனக் கருதும்
கொள்கையால் மிகைபல செய்தேன். 7.64.6

என்று கூறுகிறார்.

இவ்வாறே திருப்புன்கூர்த் திருப்பதிகத்திலும் கூறுகிறார். அடியவர்கள் பெயர்களையெல்லாம் எடுத்துக்கூறி,

"குற்றம் செய்யினும் குணமெனக் கருதும்
கொள்கைகண்டுநின்குரைகழலடைந்தேன்" 7.55.4

என்று குறிப்பிடுகின்றார்.

எனவே நட்புநெறியில், தோழமைநெறியின் அடிப்படையில் உலகம் உய்ந்து உணர்ந்து அனுபவித்து வாழ்வதற்காகக் கிடைத்த பெருநெறி ஒன்று உண்டு. அது,

"குற்றமே செய்யினும் குணமெனக் கருதும் கொள்கை"

என்பதே. அறிந்தே செய்யினும் அறியாது செய்யினும் அறிந்தவர் செய்யினும் அடியவர் செய்யினும் ஏழை செய்யினும் எளியவர் செய்யினும் அவனை நோக்கிய குற்றம் குணமாக ஏற்றுக் கொள்ளப் பெறும். சமுதாயத்தை நோக்கிய குற்றமாயின் தோழமை நெறியில் நின்று பரிகரிக்க மாட்டான்; ஒறுத்துத் தண்டித்தே தீருவன் என்பதாம்.

இக் கொள்கையின் சிறப்பை உணர்ந்த காரணத்தால் வள்ளற் பெருமான்,

குற்றம் புரிதல் எனக்கியல்பே
குணமாக் கொள்ளல் உனக்கியல்பே
சிற்றம் பலவா இனிச் சிறியேன்
செப்பும் முகமன் யாதுளது
தெற்றென் றடியேன் சிந்தைதனைத்
தெளிவித்து அச்சம் துயர் தீர்த்து
இற்றைப் பொழுதே அருட்சோதி
ஈசு தருணம் இதுவாமே.

என்று கரைந்துருகிக் கசிந்து பாடுவாராயினர்.

எனவே நட்பியல் நெறி எனப்பெறும் தோழமை நெறி ஓர் இன்றியமையாத் தேவை என நாம் கொள்ளுதல் வேண்டும். அஃது ஆன்மாவின் சமுதாயப்பிரிவைச் சீர்செய்ய எழுந்த ஒருவகைத் தனிநெறி என்று நாம் கொள்ள வேண்டும்.

நட்பியல் நெறியின் அடிப்படையில் வந்த சுந்தரர் அந்நெறியையும் அந்நெறிசார்ந்த பயனையும் முற்றாகத் துய்த்தார் எனினும் அந்நெறியில் துரிசு என நின்றதும் உண்டு என்பதும் தெரியவந்தது.

'துரிசு' என்பது இருவகை. ஒன்று இறைவனை நேர் நிறுத்தி இறைவனுக்கே செய்யும் துரிசு. மற்றது இறைவன் ஆதரவு உண்டு எனக் கொண்டு சமுதாயத்துக்கு அல்லது பிற உயிர்களுக்குச் செய்யும் துரிசு எனக் கொள்ளல் வேண்டும். இறைவனுக்குச் செய்யும் துரிசு மன்னிக்கப்பெறும் என்பதைவிட, குணமாகக் கொள்ளுகிறான் என்பதும் சமுதாயத்துக்குச் செய்யும் துரிசு தண்டனை கொடுத்தே நிறைவுறுத்தப் பெறுகிறது என்பதையும் கண்டோம்.

நட்பியல் நெறியில் விளைந்த ஒரு செழுமைக் கருத்தையும் நாம் உணர்ந்து கொள்ளுதல் வேண்டும். அது,

"குற்றமே செய்யினும் குணமெனக் கொள்ளும் கொள்கை"

என்பதே.

நட்பியல் நெறி எனப்பெறும் மலைவின்மையேசமுதாயத்

தொண்டினை உள்ளடக்கிய சமன்வயக் கொள்கையே சைவசித்தாந்தக் கொள்கையின் உயிர்நாடி எனக் கொள்ளுதல் வேண்டும். இவைகளுக்கு மூல அடிப்படையாகக் கொள்ள வேண்டியது மெய்கண்டாரின் **மலைவின்மை** என்பதும் **சேள் ஆம் புறன்** என்பதும் எனக் கொள்ள வேண்டும்.

## நட்பியல் திருமுறை

ஆட்கொள்ளப் பெறுதல், வன்தொண்டன் ஆதல், தம்பிரான் தோழராதல், அடியார்க்கடிமையாதல் என்ற நால்வகை வரலாற்று நிகழ்வுகளில் இறுதியில் நின்ற 'அடியார்க்கடியாராதல்'என்ற வரலாற்றின் மூலம் வெளிப்பட்ட திருமுறையே **நட்பியல் திருமுறை.** அது "தில்லைவாழந்தணர்தம் அடியார்க்கும் அடியேன்" எனத் தொடங்கும் திருத்தொண்டத் தொகையாகும்.

தென்திசைவந்த நாவலர் கோன் புகழ் வன்தொண்டன் இறையருளால் திருக்கயிலை செல்லும்போது அங்கிருந்த உபமன்யு முனிவர் எழுந்து நின்று வணங்கினார். இறைவனை அல்லாது எவரையும் வணங்காத நீவிர் இப்போது எழுந்து நின்று வணங்கும் குறிப்பு யாது? என்று கேட்க அப்போது உபமன்யு முனிவர்,

> தம்பிரானைத் தன் உள்ளம் தழீஇயவன்
> நம்பியாரூரன் நாம் தொழும் தன்மையான்

— திருமலைச் சிறப்பு_19

என்றும்

> மாதவம் செய்த தென்திசை வாழ்ந்திடத்
> தீதிலாத் திருத்தொண்டத் தொகைதரப்
> போதுவார் - - - - -

திருமலைச்சிறப்பு _25

என்றும் கூறினார் எனப் பெரியபுராணம் பேசுகிறது.

மேலும்,

நேசம் நிறைந்த உள்ளத்தால்
நீலம் நிறைந்த மணிகண்டத்து
ஈசன் அடியார் பெருமையினை
எல்லா உயிரும் தொழ எடுத்துத்
தேசம் உய்யத் திருத்தொண்டத்
தொகை முன் பணித்த திருவாளன்
வாச மலர் மென் கழல் வணங்க
வந்த பிறப்பை வணங்குவாம்.

— பெரியபுராணம், சண்டேசர் புராணம் 60.

என்று, சேக்கிழார் பெருமான் திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன் முன் நிறுத்தி வணக்கம் செய்கின்றார்.

திருத்தொண்டத் தொகையை அடிப்படையாகக் கொண்டே திருத்தொண்டர் திருவந்தாதியும் அதன் வழியாகத் திருத்தொண்டர் புராணமும் அமைந்தன. திருத்தொண்டத் தொகையே உலகளாவிய பொதுமையைத் தன்னகத்தே கொண்ட பெருமைமிகு காப்பியமாகத் திகழ்கிறது

நட்பியல் நெறியை உள்ளீடாகக் கொண்டதாய் உலகில் உள்ள எச்சமயங்களை எந்த அடிப்படையில் சார்ந்த உயிராக இருப்பினும் அவ்வச் சமயங்களில் நின்று அவ்வப்படி நிலைகளிற் பயிற்சி பெற்று இறையடியைச் சார்ந்த எல்லாருக்கும் யான் அடியன் என்று பொதுமையை அடிப்படையாக ஏற்று அடிமைத்திறம் வழங்கிய முதன்மைக் காப்பியம்.

சாதியும் சூழலும் சமயமும் ஆகிய வேறுபாடுகளைக் கடந்து அனைவரையும் இறைவன் அடியவர் என நிறுத்தி அனைவருக்கும் அடிமைகூறி வியந்த சிறப்புடையது திருத்தொண்டத்தொகை.

பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்
பரமனையே பாடுவார் அடியார்க்கும் அடியேன்

சித்தத்தைச் சிவன்பாலே வைத்தார்க்கும் அடியேன்
திருவாரூர்ப் பிறந்தார்கள் எல்லார்க்கும் அடியேன்
முப்போதும் திருமேனி தீண்டுவார்க் கடியேன்
முழுநீறு பூசிய முனிவர்க்கும் அடியேன்
அப்பாலும் அடிச்சார்ந்தார் அடியார்க்கும் அடியேன்
ஆரூரன் ஆரூரில் அம்மானுக்கு ஆளே. 7. 39 10

இதனுள் "பத்தராய்ப் பணிவார்கள், திருவாரூர்ப் பிறந்தார்கள், அப்பாலும் அடிசார்ந்தார் அடியார்க்கும்"- என்ற வரிகளால் சமயப் பொதுமை உணர்த்தப் பெறுகிறது. எந்த ஒரு கடவுளைத் தலைவராகக் கொண்டு பத்தி செய்பவர்களையும் குறிப்பிட்டுக் கூறி அடிமை பேணுகின்றார். திருவாரூரில் பிறந்த எம்மதத்தவராயினும் அவர்களுக்கு அடிமை என்று பேசுகின்றார்.

எல்லாவற்றுக்கும் மேலாக, அப்பாலும் எனக் கூறி, கால இடவேறுபாடுகளையெல்லாம் கடந்த நிலையில் எடுத்துக் கூறி, அடிசேர்ந்த அவர்களுக்கெல்லாம் அடிமை பேணி நிற்கிறார். சமயத்துறையில் இவ்வாறு உலகளாவிய பொதுமையை உள்ளீடாகக் கொண்டு அடிமைத்திறம் பேணும் நிலை பேசும் காப்பியத்தை வேறு எந்த ஒரு சமய நூலிலும் காண இயலாது.

எனவே நட்பியல் திருமுறை என்பதாக இப்பதிகம் கருதப் பெறுகிறது. சுந்தரரும் நட்பியல் நெறி எனப் பெறும் தோழமை நெறியில் நின்று சமயப் பொதுமை இலக்கியம் படைத்த பேரருளாளராகிறார்.

## முடிப்புரை

அன்பின் இருதிறத்து வெளிப்பாடுகளைத் திருக்குறள் கொண்டு உணர்தல் வேண்டும். முதல்நிலை வெளிப் பாட்டினால் ஆன்மா தன்னின் ஒரு பிரிவாகிய தற்பிரிவைத் தூய்மை செய்து கொள்கிறது. இரண்டாம் நிலை வெளிப் பாடானது அன்பு, ஆர்வம், நட்பு என வெளிப்படுகிறது. அதனால் ஆன்மாவின் சமுதாயப் பகுதியானது தூய்மை செய்யப் பெறுகிறது. இஃது ஆன்ம இயற்கை நிலையாலும்

அன்பின் இயற்கை நிலையாலும் மலர்ந்த மலர்ச்சி எனக் கொள்ள வேண்டும்.

சமுதாயப் பிரிவைத் தூய்மை செய்ய வெளிப்பட்ட நட்புநெறியே தோழமை நெறியாகிறது. இங்கே கொள்கை முரண் இல்லை. மலைவின்மை என்பதே கொள்கையாகிறது. நட்புநெறியின் அடிப்படையில் எழுந்த திருமுறையாகிய திருத்தொண்டத் தொகையே **நட்பியல் திருமுறை** என மலர்கிறது.

உலகளாவிய பொதுமைச் சமயம் காண விழைவார்க்குப் பெரிதும் ஊக்கம் தருவதாக அமைந்த பொதுமைக் கொள்கையே 'நட்பியல் நெறி'. அதனை மலர்வித்த நிலையில் எழுந்த திருமுறையே திருத்தொண்டத் தொகை எனப் பெறும் "நட்பியல் திருமுறை".

நட்பியல் நிலைமையினால் விளைந்த உலகளாவிய பொதுமையை உயிரோட்டமாகக் கொண்ட மெய்ப் பொருட் கொள்கையே **சைவசித்தாந்தப் பெருநெறி.**

கால, தேச, சமய வேறுபாடுகளைக் கடந்ததாய் அனைத்துக் கொள்கைகளையும் இணைத்து, மருவி உயர்ந்த உலகளாவிய பொதுமையை உயிரோட்டமாகக் கொண்டு வளர்ந்த வாழ்வியல் நெறியே **சைவசித்தாந்தப் பெருநெறி** எனக் கொள்ள வேண்டும்.

